உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

பாம்பனார் அறக்கட்டளை

# பாதமலர் - 2



## பாராயணத் திரட்டு

## திருப்புகழ், பாம்பன் சுவாமிகள் பாடல்கள்

பாம்பனார் அறக்கட்டளை (Trust) பதிவு எண். 524/95
எண். 354, டாக்டர் இலட்சுமணசாமி சாலை,
கே.கே. நகர், சென்னை - 600 078.

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# சமர்ப்பணம்

கருவிலே திருவுடையவராகவும் மனித ஆற்றலை மீறிய (அமானுஷ) சக்தி விஸ்மித பண்டிதராகவும் விளங்கி, ஏகதெய்வ வழிபாட்டில் அறுமுகப் பரமனையே சர்வசதாகாலமும் மனத்தில் இறுத்தி, சாத்திரங்களையும் தோத்திரங்களையும் சைவசித்தாந்த கருத்துக்களையும் தமது 6666 பாடல்களால் வெளிப்படுத்தி, வையமெலாம் சைவப்பயிர் தழைக்கச் செய்து, பக்தகோடிகளை ஆண்டருள்நிமித்தம் முருகப் பெருமானையே முழுதும் வேண்டிநின்ற

மகாதேஜோ மண்டலகுரு அபராருணகிரி அத்தியாச்சிரம சுத்தாத்துவித வைதிக சைவ சித்தாந்த ஞானபாநு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளின் பொன்னார் திருப்பாதங்களில் எங்களின் இந்த 2-வது மலரை சமர்ப்பணம் செய்கின்றோம்.

பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு
வடபழநி,
சென்னை - 600 026.

உ
சிவமயம்
ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# பாதமலர் - 2

பாம்பனார் அறக்கட்டளையால் 27.05.1997
செவ்வாய்க்கிழமை ஈஸ்வர வருடம் வைகாசி மாதம்
13-ம் நாள் சஷ்டி திதி கூடிய ஸ்ரீமத் பாம்பன்
சுவாமிகளின் 68-வது குருபூஜை நன்னாளில்
இப்பாராயணத் திரட்டு சென்னையில்
வெளியிடப்படுகிறது.

## *திருப்புகழ்*
## *பாம்பன் சுவாமிகள் பாடல்கள்*
## *பாராயணத் திரட்டு*

•

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

## பாம்பனார் பழநி பாதயாத்திரைக்குழு

இறைவன் அருள்பாலிக்கும் திருத்தலங்கள் அனைத்தும் உயர் பலனை நல்கும் சிறப்புடையன. திருவாரூரில் பிறக்க முத்தி, திருவண்ணாமலையை நினைக்க முத்தி, காஞ்சியில் இருக்க முத்தி, காசியில் இறக்க முத்தி. இவ்வாறு சிறப்புகள் பெறும் திருத்தலங்களின் மகிமைகளை முருகனின் அறுபடை வீடுகள். நமக்களித்து அளவிலா நிம்மதியைத் தரவல்லன. அவற்றுள் 'குமரகுரு' என்ற பெயர் கொண்டு, பழநி என்ற புண்ணியத்தலத்தில் பக்தர்கள் நினைத்ததை நடத்தித் தரும் முருகப் பெருமானை, பாதயாத்திரையாகச் சென்று தரிசித்தல் இப்பிறவிப் பிணியையே நீக்கும் மகா வல்லமை வாய்ந்ததாகும்.

1979 ஆண்டு தைப்பூசத்திற்குப் பழநிக்குப் பாதயாத்திரையாக சென்றுவர வேண்டும் என்ற ஆன்மீக நோக்கு திரு. B. இராமசாமி அவர்களுக்கு ஏற்பட்டது. அன்னாரது நல்லெண்ணத்தினால் உருவானதுதான் பழநி பாதயாத்திரைக்குழு சிம்ஸன் கம்பெனியில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது தமது நெருங்கிய நண்பர்களான திரு. N. பழநிவேல், திரு. K. வேங்கடசுப்பிரமணியன், திரு. R. அமிர்தலிங்கம் ஆகியவர்களுடன் திண்டுக்கல்லிருந்து பழநிக்கு பாதயாத்திரையை, தலைமைவகித்து நடத்திச் சென்றவர் திரு. B. இராமசாமி அவர்கள். பழநி பாதயாத்திரைக்குச் சென்ற நான்கு அன்பர்களுக்கும் விபூதி அணிவித்து „வழியில் பாம்பன் சுவாமிகள் பாடல்களை பாடிக்கொண்டு செல்ல வேண்டும் என்றும், வெயிலில் நடக்க வேண்டாம்" என்றும் உத்தரவு பிறப்பித்து, சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகள் சென்னையில் வழியனுப்பி வைத்தார்.

பிறகு ஒவ்வொரு வருடமும் தைப்பூசத்தில் பழநிக்கு பாதயாத்திரையாகச் சென்று தரிசிக்கும் பாக்கியம் இக்குழுவிற்கு கிடைக்கப் பெற்றது.

இக்குழுவின் நிலையை மேம்படுத்தும் வகையில் காவல்துறை கண்காணிப்பாளர் திரு. N. கோவிந்தசாமி,

பாலு ஜுவல்லர்ஸ் உரிமையாளர் திரு. S. பாலசுப்பிரமண்யம், P.A. கன்ஸ்ட்ரக்ஷன் உரிமையாளர் திரு. K. பொன்னுசாமி, திரு. V. முத்துக்குமரகுருசாமி என்கிற திரு. V. சத்குரு மற்றும் ஆன்மீக நெறியுடைய அன்பர்கள் ஆகியோர்களின் சேர்க்கை, குழுவின் ஆணிவேராக அமைந்துள்ளது.

27-1-1985 அன்று குழுவிற்கு சுவாமிகளின் பெயர் வைக்கவேண்டும் என்று திரு. N. பழநிவேல் மற்றும் திரு. V. சத்குரு ஆகியவர்கள் கூறியதை அன்பர்கள் ஆமோதித்ததில் இருந்து குழுவிற்கு 'பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு' என்ற பெயர் நிலவி வருகிறது.

1987-ம் வருடத்திய பழநி பாதயாத்திரையைத் தொடங்கி, பாம்பன் சுவாமிகளை மந்த்ர வடிவமாக (அவரின் பாடல்கள் 6666 சேர்ந்தன) பழநிக்கு அனுப்பி வைக்கும் நோக்கத்தில் P.A. கன்ஸ்ட்ரக்ஷன் உரிமையாளர் திரு. K. பொன்னுசாமி அவர்களின் இல்லத்தில் நடத்திய பிரம்மாண்டமான வழிபாடு, என்றும் நினைவில் நிற்கும் பெருவிழாவாகும்.

அன்று, ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் 6666 அருட்பாடல்களை பட்டுத்துணியால் கட்டி, பாடலுடன் பாம்பன் சுவாமிகளையும் பழநிக்கு முருகப்பெருமான் அழைத்துச் செல்லும் வைதீகமாக, ஒன்பதாவது ஆண்டு பாதயாத்திரை அமைந்தது.

சுவாமிகள் நிஷ்டை கூடிய பிரப்பன் வலசைச் செம்பதியில், பாம்பன் சுவாமிகள் கோயிலுக்குச் செல்லும் பாதையில், அலங்கார நுழைவுவாயில் 1990 ஆம் ஆண்டு பாம்பன் சுவாமிகளின் கருணையாலும், அவ்வூர் மக்களின் பேருதவியாலும், மௌனசுவாமிகள் அவர்களாலும் இராமநாதபுரம் மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளராக இருந்த திரு. ஆறுமுகம் அவர்களின் கண்காணிப்பிலும், நமது குழு அன்பர்களின் முயற்சியாலும், சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகளின் முன்னிலையில் திறக்கப்பட்டது.

சுவாமிகளின் பெயர்வைத்தபின்பு குழுவின் தன்மை, வளர்ச்சி, புகழ் மிகவும் பிரசித்தி பெற்றது.

1979ஆம் ஆண்டில் சென்னை வடபழநி முருகன் கோயிலில் இருந்து பாதயாத்திரை தொடங்கியது. 1988 ஆம் ஆண்டு முதல் வடபழநி முருகனை தரிசித்துவிட்டு சென்னை

திருவான்மியூர் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயத்திலிருந்து தொடங்கி பழநிக்கு பாதயாத்திரை சென்று வருகின்றார்கள். இக்குழுவின் புரவலர் திரு. S. பாலசுப்பிரமணியம் அவர்கள் முதல் பாதமலரை ஸ்ரீமத் சுவாமிகளின் 63-வது குருபூசை தினத்தன்று குழுவின் சார்பாக வெளியிட்டார்கள்.

இக்குழுவின் அங்கமான பாம்பனார் அறக்கட்டளை பாம்பன் சுவாமிகளின் 68-வது குருபூஜை நன்னாளான 27-5-97 செவ்வாய்க்கிழமையன்று பாதமலர்-2 என்ற திருப்புகழ், பாம்பன் சுவாமிகள் பாடல்கள் அடங்கிய மலரை வெளியிடுகிறது.

குழுவின் வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் ஒத்துழைப்பு நல்கிவரும் பேரன்பர்களுக்குப் பழநிப் பதிவாழ் பாலகுமாரனின் திருவருளும், ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் குருவருளும் என்றும் உண்டு.

**பாம்பனார் பழநி பாதயாத்திரைக்குழு**
**வடபழநி, சென்னை-600 026.**

உ

ஓம் குமர குருதாச குருப்யோ நம:

## *பாதயாத்திரைக்குழு*

### *செயற்குழு உறுப்பினர்கள்:*

| | | |
|---|---|---|
| 1. | திருவாளர். B. ராமசாமி | தலைவர் |
| 2. | திருவாளர். S. சுந்தரமூர்த்தி | உபதலைவர் |
| 3. | திருவாளர். K.S. மணி | செயலாளர் |
| 4. | திருவாளர். S. ஸ்ரீதரன் | இணை செயலாளர் |
| 5. | திருவாளர். M. ராமகிருஷ்ணன் | பொருளாளர் |

### *உறுப்பினர்கள்:*

1. திருவாளர். M. இராமலிங்க சுவாமி
2. திருவாளர். D. தயாளன்
3. திருவாளர். P. கங்காதரன்
4. திருவாளர். S. விஸ்வநாதன்
5. திருமதி. பிரேமா மூர்த்தி
6. திருவாளர். C.S. சுவாமிநாதன்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

## பாம்பனார் அறக்கட்டளையும் பணிகளும்

பாம்பனார் பழநி பாத யாத்திரைக்குழு தொடர்ந்து நல்லமுறையில் நடப்பதற்கும் மேலும் அறப்பணிகள் செய்வதற்கும் 3.5.1995 ஆம் ஆண்டு புதன்கிழமை விருகம்பாக்கம் சார்-பதிவாளர் அலுவலகத்தில் *பாம்பனார் அறக்கட்டளை* பதிவு செய்யப்பட்டுள்ளது. பதிவு எண். 524/95.

இந்த அறக்கட்டளையின் உயர் மட்டக் குழுவினராக

1. தவத்திரு. சோழவரம் நடேச சுவாமிகள்
2. திரு. K. பொன்னுசாமி பி.எஸ்ஸி.,
   (P.A. கன்ஸ்ட்ரக்ஷன், உரிமையாளர்)
3. திரு. S. பாலசுப்பிரமணியம்
   (பாலு ஜுவல்லர்ஸ், உரிமையாளர்)

இவரின் மறைவுக்குப்பிறகு, அன்னாரின் புதல்வர் திரு. பாலு ஐயப்பன் அவர்கள் செயல்படுகிறார்.

சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகளின் வயது உடல் நிலை தளர்ச்சியை உத்தேசித்து திரு. N. கோவிந்தசாமி (காவல்துறை, கூடுதல் கண்காணிப்பாளர்) பிரதிநிதியாக செயல்படுகிறார்.

அறக்கட்டளையின் செயல்பாடுகள் செயற்குழு உறுப்பினர்களால் நிர்வாகிக்கப்படுகிறது.

<u>பணிகள்:</u>

1. வருடந்தோறும் பாம்பனார் பழநிபாத யாத்திரைக் குழு நல்லமுறையில் பாதயாத்திரையை நிறைவேற்ற உறுதுணையாயிருத்தல்.
2. பாம்பன் - ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் குருபூஜை
3. பாம்பன் சுவாமிகள் விழா (ஆண்டுதோறும் டிசம்பர் 25ஆம் நாள் கொண்டாடப்படுவது)
4. மயூரவாகன சேவன விழா
5. மகா ஸ்கந்தர் ஷஷ்டி விழா ஆகிய விழாக்கள் சிறப்பான முறையில் நடத்துதல்
6. பாம்பன் சுவாமிகளின் பாடல்களையும் புகழையும் புத்தக வடிவில் வெளியிடுவது.
7. நன்றாகப் படிக்கும், வசதியற்ற குடும்பத்தைச் சார்ந்த மாணவ மாணவிகளுக்கு உதவுவது.

உ
சிவமயம்
ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# பதிப்புரை

மகாதேஜோ மண்டலகுரு அபராருணகிரி அத்தியாச்சிரம சுத்தாத்வைத வைதீக சைவ சித்தாந்த ஞானபாநு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய அருட்பாடல்கள் 6666.

அத்தனைப் பாடல்களும் முருகப்பெருமானின் ஒப்புதல் பெற்று, சொற்சுவை பொருட்சுவை ததும்பி இனிக்கும் பேரமுதமாகவும், உடற்பிணியையும் பிறவிப்பிணியையும் தீர்க்கும் அருமருந்தாகவும், பகைதவிர்க்கும் அரணாகவும், இருள்நீக்கும் சுடராகவும், நினைத்ததைத் தரும் கற்பகத்தருவாகவும், வேதங்களின் சாரமாகவும், அறுமுகச் சிவனின் பெருமைகளைக் கூறும் சாத்திரங்களாகவும் தோத்திரங்களாகவும், மகாமந்திர மறையாகவும், உன்னதமான உபதேசமாகவும், எக்காலத்தவரும் ஏத்தும் பொக்கிஷமாகவும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. இத்தகு சக்திவாய்ந்த, ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் பாடல்களில் சிலவற்றையும், ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் கட்டளைக்கேற்ப ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகளின் 'திருப்புகழ்' பாடல்களில் சிலவற்றையும் பாராயணமுறைக்கேற்ப இம்மலரில் பிரசுரித்திருக்கிறோம்.

தங்க வணிகமும், அடியார்கள் தம் மனத்தில் தங்க இடமும் கொண்டவருமான சான்றோர் 'பாலு ஜுவல்லர்ஸ்' திரு. எஸ். பாலசுப்ரமணியம் அவர்களின் தங்க மகன் திரு. பாலு ஐயப்பன் அவர்களின் இல்லத்தில் அமைந்துள்ள மூன்றாவது மாடியில் (பாம்பன் ஹாலில்) ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் குருபூஜை தினமாகிய 27-5-1997 செவ்வாய்க்கிழமை சஷ்டி திதி கூடிய சுபதினத்தில் இப் பாதமலர்-2 சான்றோர்களால் வெளியிடப்படுகின்றது.

இப்பணியில் எங்களை ஊக்குவிக்கும் அன்பர்கள் அனைவருக்கும் எங்கள் குழு சார்பில் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

பக்தகோடிகள் யாவரும், இவ்வுயர்நூலை பக்தியோடு பாராயணம் செய்து, சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வும், செவ்வேள் பரமனை எவ்வேளையும் துதிக்கும் பாக்கியமும் பெற்றுய்வார்களாக!

இங்ஙனம்

B. இராமசாமி

நிறுவனர் மற்றும் தலைவர்

பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு,

வடபழநி, சென்னை - 6000 026.

முகவரி:

தலைவர்

பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு

61B, R.K. சண்முகம் சாலை,

கே.கே. நகர்,

சென்னை - 600 078.



பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்



"அத்தியாச்சிரமி" ஸ்ரீ குமாரதாசன் என்னும் பெயரிய
ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள்

உ
சிவமயம்
ஸ்ரீசரவணோத்பவ பரபிர்ம்மனே நம:

# முன்னுரை

பல்லாயிரங்கோடி அண்டங்கள் எங்கணும் பரவு நித்தியானந்தமாகிய ஆறுமுகப் பெருமானை அனவரதம் பூஜித்து 6666 அருட்பாடல்களை அன்பர்கள் உய்யும் பொருட்டு அளித்தவர் மகாதேஜோ மண்டல குரு *அபராருணகிரி அத்தியாச்சிரம சுத்தாத்வைத வைதீக சைவசித்தாந்த ஞானபாநு ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்.*

தமிழ்ப்புலமையும், வடமொழிப்புலமையும் பெற்று வேதங்களின் சாரமாகவும் இலக்கணப் பிழிவாகவும் விளங்கும் சாஸ்திர, தோத்திரங்களை ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் நமக்களித்துள்ளார்.

*நானா சாதிகுலம் உரு நாமம் பாராமல்*
*ஊனார் சீவனெலாம் அருள்உயிர் என்றே மதிக்கும்*

-திருவலங்கத்திரட்டு முதற்கண்டம்

உயர்மனங் கொண்டு துறவறநெறி வாழ்ந்தவர் நம் சுவாமிகள்.

*நான்பாடு பாட்டைநவில் பவர்க்குநல நல்காய்*
*கான்பாடு வண்டறையும் கழுகுமலை முருகா.*

-திருவலங்கத்திரட்டு முதற்கண்டம்

*எனைத்தள்ளி னாலுமெனை நம்பினவர்த் தள்ளேல்*
*கனைத்தண்டை சிலம்பவருங் கழுகுமலை முருகா*

-திருவலங்கத்திரட்டு முதற்கண்டம்

என்று நமக்காகவே முருகனை வேண்டித் தவம் இயற்றிவர் நம் சுவாமிகள்.

அவரது 6666 அருட்பாடல்களும் இறைவனின் ஒப்புதல் பெற்ற மந்திரங்களாக அமைந்து நினைத்ததை நடத்தி வைக்கும் ஆற்றல் படைத்தன. இப்பாடல்களை ஆறு மண்டலங்களாகப் பகுத்தளித்துள்ளார். மேலும் 32 வியாசங்களை விரித்தருளினார்.

பாம்பன் சுவாமிகளின் சீரிய நெறியில் தம்மை இணைத்துக் கொண்ட குமரகுருதாசன் எனப் பெயரிய ஸ்ரீமத்

பாலசுந்தர சுவாமிகள், ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளிடத்தில் பக்திப்பரவசம் கலந்த அன்பினால் தொண்டு புரிந்து வந்தார்.

இவருக்கு சீடராக இருந்து தமது குருவுக்கும் குருவான பாம்பன் சுவாமிகளை நேரில் தரிசித்து ஆசிபெற்ற பாக்கியம் சோழவரம் தவத்திரு. நடேச சுவாமிகள் அவர்களுக்குக் கிட்டியது.

சிறு வயது முதற்கொண்டே பாம்பன் சுவாமிகள் மேல் ஈடுபாடும், அடிக்கடி தரிசிக்க விழையும் மனப்பான்மையும் கொண்டவர் *தவத்திரு. நடேச சுவாமிகள்.*

பாலசுந்தர சுவாமிகள், ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளுக்கு செய்த பூஜை நியமப்படி சுமார் 24 வருடங்கள், பாம்பன் சுவாமிகளுக்கு அபிஷேகம் அர்ச்சனை, நிவேத்தியம், பாராயணம், கூட்டு வழிபாடு புரிந்தவர் தவத்திரு நடேச சுவாமிகள். மேலும் குருபூஜை விழா, மயூரவாகன சேவன விழா, மகா சிவராத்திரி விழா போன்ற விழாக்களை சீரும் சிறப்புமாக நடத்தி வந்துள்ளார். சோழவரத்திலிருந்து திருவான்மியூருக்கு நடந்தே சென்று விழா நடத்தினார். சோழவரம் திருவான்மியூர் இடைப்பட்ட தூரம் அதிகம் தான். ஆனால் அவருக்கோ அது இரண்டு மைல் தூரம் தான். தவத்திரு நடேச சுவாமிகளின் வழிபாட்டு முறைக்கேற்ப *பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு* நியதிகளைக் கடைபிடித்து வருகின்றது.

குழுவில் கலந்து கூட்டுப் பாராயணம் செய்வதற்கு அடிப்படையாக அமைவது கிருத்திகை பூசை. ஒவ்வொரு மாதம் கிருத்திகை பூசை இக்குழுவின் தலைவர் திரு. B. இராமசாமி அவர்களின் இல்லத்தில் ஆத்மார்த்தமாக நடைபெற்று வருகின்றது. குழுவின் வளர்ச்சிக்கு முக்கிய காரணமாக, தலைவர் திரு. B. இராமசாமி அமைகிறார்.

பாம்பனார் பழநி பாத யாத்திரையில் கலந்து கொண்டு பழநி முருகனை தரிசிக்க, கிருத்திகை பூசையில் கலந்து கொள்பவருக்கு முதலிடம் தரப்படுகின்றது.

மாதாந்திர வழிபாடு குழு உறுப்பினர்களின் இல்லங்களிலும் முருக பக்தர்களின் இல்லங்களிலும் நடைபெற்று வருகிறது.

குழு நாளுக்கு நாள் வளர்ச்சியடைவதற்குக் காரணமாக

அமைவது அன்பர்களிடையே நிலவும் கட்டுப்பாடும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும், இறையுணர்வும், மற்றவரை மதித்து நடக்கும் பெருந்தன்மையும் ஆகும்.

குழுவின் செயல்முறைகளுக்கு உதவியாகப் புரவலர்களின் தாராளமான மனப்பான்மை, தாமாகவே கொடுத்துதவும் பேரன்பு இவைகளாலும் குழு வளர்ச்சி அடைகின்றது.

குழுவின் முதுகெலும்பாக விளங்கும் காவல்துறை கூடுதல் கண்காணிப்பாளர் *திரு. N. கோவிந்தசாமி,* P.A. கன்ஸ்ட்ரக்ஷன் உரிமையாளர் *திரு.* K. *பொன்னுசாமி* பாலு ஜுவல்லர்ஸ் உரிமையாளர் S. *பாலசுப்பிரமணியம்* அவர்களின் தவப்புதல்வன் *திரு. பாலு ஐயப்பன்* ஆகியவர்கள் குழுவின் மீது அக்கறை கொண்டு பெருமை தேடித் தருகிறார்கள்.

குழுவின் வளர்ச்சிக்கு *சத்குரு (V. முத்துக்குமரகுருசாமி)* அவர்களின் இன்னிசைத் திறனும், சுவாமிகள் பாடல்களில் அவர்பெற்ற புலமையும், குழு அன்பர்கள் பொருளுணர்ந்து பாராயணம் செய்யும் அளவிற்கு அவர்களுக்கேற்ப கற்றுத்தரும் திறமையும், குழு மேன்மேலும் வளர்ச்சியுறுவதற்கு அடிப்படையாக இருந்து வருகிறது.

*சிம்ஸன் கம்பெனி நிர்வாகிகள்* இக்குழுவின் மேல் அதிக மதிப்பும் பற்றுதலும் வைத்து ஆண்டுதோறும் பழநி பாதயாத்திரைக்கு வாகன வசதி செய்வதோடு மேலும் பல உதவிகளைச் செய்து வருகின்றார்கள்.

பழநி பாதயாத்திரை சென்னையிலிருந்து தொடங்கியதிலிருந்து அதற்குத் தேவையான வாகன வசதிகள் செய்து உதவி வரும் காவல்தறை கூடுதல் கண்காணிப்பாளர் திரு. N. கோவிந்தசாமி அவர்களின் குடும்பத்தினர், P.A.கன்ஸ்ட்ரக்ஷன் உரிமையாளர் திரு. K. பொன்னுசாமி அவர்களின் குடும்பத்தினர், திரு. V.T. மூர்த்தி குடும்பத்தினர், வழிநெடுகத் தங்கள் இனிப்பை தந்துதவும் அர்ச்சனா ஸ்வீட்ஸ் திரு. S. ராஜு குடும்பத்தினர், பல உதவிகள் புரிந்துவரும் திரு. பாபா சங்கர் குடும்பத்தினர் மற்றும் தனித்தும், சேர்ந்தும், குழுவிற்குத் தேவையான உதவிகளைச் செய்து வரும் அன்பர்கள், பாதயாத்திரை தொடக்கத்திலிருந்து ஓட்டுநர் பணியோடு வழிநெடுக அன்பர்களின் தேவைகளுக்கேற்ப

இன்முகத்தோடு நல்லுதவி செய்துவரும் திரு. பாலகிருஷ்ணன் அவர்களின் ஈடுபாடு, ஆகியவைகள் குழு மேலும் சிறப்பாக அமைய வழிவகுக்கின்றன.

*வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா* என்பதை தாரக மந்திரமாக ஒவ்வொரு பாடல் பாடு முன்னரும் பாடி முடித்த பின்னரும் சொல்லி இடையூறுகளை முறியடித்து வருகின்றது இக் குழு.

பாதயாத்திரை செல்லும் போது வழிநடைக் களைப்பைப் போக்க *ஹரஹர சிவ சிவ* என்ற மந்திரத்தைத் சொல்லிக் கொண்டே செல்வோம். வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா, சக்திவேல் முருகனுக்கு அரோகரா, ஞானவேல் முருகனுக்கு அரோகரா என்று முருகன் திருமந்திரங்களைச் சொல்லி, அரோகரா என்று மற்ற அன்பர்கள் சொல்ல, நடப்பதே தெரியாமல் பல கிலோ மீட்டர் தொலைவு தாண்டிவிடுவோம்.

பாத யாத்திரை ஆங்காங்கே தங்கி ஓய்வெடுத்துச் செல்லும் இடங்களில் பாராயணமும் அதைத் தொடர்ந்து மகேஸ்வர பூசையும் நடைபெறுகிறது.

வழிபாட்டில், ஷண்முனீந்திரர்களான அகத்திய முனிவர், நக்கீரர் பெருமான், குமரகுருபரர், அருணகிரிநாதர், சிதம்பர சுவாமிகள், பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஆகியவர்களை வழிபடுவதைக் குறிப்பதற்காக, ஆறு கற்பூர தீபம் வரிசையாக ஏற்றி வணங்கப்படுகிறது.

*இறைமுனிட்டு ணரதலுண் கறையைமொக்கும்* என்ற பாம்பன் சுவாமிகளின் வாக்கிற் கிணங்க, முருகனுக்குப் படைத்த பின்பே சாப்பிடும் வழக்கத்தை வாழ்க்கையில் கடைபிடிக்க அடிப்படையாக அமைகிறது மகேஸ்வர பூசை.

பழநி பாதயாத்திரைக்குச் செல்லும் வழியில், தங்கும் இடங்களில், வழிபாடு, பூசை நித்தமும் உண்டு. வழிபாடு நடக்கும் இடங்களில் பற்பல முன்னேற்றங்களும் வளர்ச்சியும் ஏற்படுவதை உணரும் அன்பர்கள் தாங்களே, குழு தங்கிச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முன்வருகின்றனர். இச்செயல் ஸ்ரீமத் சுவாமிகளின் பெருங்கருணைத் திறனால் அமைவதாகும்.

பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு தொடர்ந்து நன்கு செயல்பட, பாம்பனார் அறக்கட்டளை உருவாக்கப்பட்டு, அறக்கட்டளையினரால் இயங்கி வருகிறது.

இக்குழுவின் வளர்ச்சிக்கு முருகப் பெருமானின் திருவருளும், தோன்றாத் துணையாகவும் தோன்றும் துணையாகவும் இருந்து வரும் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள், ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள் குருவருளும், நம்முடன் வாழ்ந்து அருள்புரியும் ஸ்ரீமத் சிதம்பர சிவஞான சுவாமிகள், சோழவரம் தவத்திரு. நடேச சுவாமிகள் வாழ்த்துக்களும், நல்லெண்ணம் கொண்ட சான்றோர்களின் பரந்த மனப்பான்மையும் அரணாக அமைகின்றன.

ஆன்மீகப் பயிர் தழைக்கச் செய்யும் இக்குழுவின் நலனிலும், வழிபாட்டிலும், பாதயாத்திரையிலும் இறையன்பர்கள் பங்கு கொண்டு எல்லாம் வல்ல பழநி ஆண்டவனின் திருவருளும் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் குருவருளும் பெற்று இனிதே வாழ்வார்களாக!

*வெற்றி வேல் முருகனுக்கு ஹரஹரோகரா.*

*பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு*
*வடபழநி,*
*சென்னை - 600 026.*

## பாதமலர்-2

**தெய்வீக மணம் வீசும் இம்மலரைத் தொகுத்துத் தொடுத்தவர்கள்.**

1. அடியார். M. இராமலிங்க சுவாமி - தலைமை
2. அடியார். N. பழநிவேல்
3. அடியார். S. சுந்தரமூர்த்தி
4. அடியார். D. தயாளன்
5. அடியார். R. வீரபத்திரன்

உ
சிவமயம்
ஆறுமுகம் துணை செய்யும்

வாழ்க நின் பேரருள்! வெல்க நின் பேரருள்!!

## திருப்போரூர் அருள்மிகு கந்தசாமி தெய்வத்தான பரம்பரை ஆதீன தர்மகர்த்தர் *ஸ்ரீமத் சிதம்பர சிவஞான சுவாமிகள்* வழங்கிய

# ஆசியுரை

நெஞ்சகத் துள்ளும் புறனுமாய் நிறைந்த
நின்பரி பூரணம் நினைந்து
வஞ்சகச் சகப்பொய் யனைத்தையும் மறந்து
வாழுநாள் எந்தநாள் அடியேன்
செஞ்சடைக் குழகன் அஞ்செவிக் கமுதாத்
திகழ்மறை முடிவினைப் புகன்றோய்
தஞ்செனப் பணிவோர்க் கருள்தரும் போரூர்ச்
சரவணா பிரணவப் பொருளே

-ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள்

கலியுக வரதனான கந்தசாமிப் பெருமான் கேட்ட-தெல்லாம் பாலிக்கும் கேடிலாத் தாதா வாகவும் அடியார்கள் வினைகளைப் பொடியாக்கும் நல்ல பெருமானாகவும் அருளைப் பொழிகின்றார்.

சர்வலோக நாயகனான முருகப் பெருமானைக் கடவுளாகவும், குருவாகவும் வழிபட்டு உய்திபெற்ற நமது முன்னோர்கள் காட்டிய சீரிய நெறிமுறைகளைக் கடைபிடித்து ஒழுகுதல் நமது தலையாய கடமையாகும்.

பிறவியிலேயே ஞானம் கைவரப் பெற்று இறைவன் முருகனை நேரில் தரிசித்தும், வணங்கியும், துதித்தும், பேசியும் மகோன்னத நிலையை அடைந்த அகத்தியர், நக்கீரர், குமரகுருபரர், அருணகிரிநாதர், சிதம்பரசுவாமிகள், பாம்பன் சுவாமிகள் போன்ற மகான்களின் சாத்திர, தோத்திரப் பாடல்கள் பிறவிப்பிணி தீர்க்கும் மாமருந்தாக விளங்குகின்றன.

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்து, முருகப்பெருமானை கனவிலும் நனவிலும் துதித்து, ஏக தெய்வ வழிபாடு புரிந்து

நமக்குத் தோன்றாத் துணையாக இருந்து வருபவர் ***ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்.*** அவருடைய திருப்பெயரில் பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு அமைத்து, அதை நன்முறையில் நடத்த பாம்பனார் அறக்கட்டளை உருவாக்கி, செயற்கருஞ் செயல் பல புரிந்து, இறைபணியில் அனைவரையும் ஈடுபடுத்திவரும் பேரன்பர்களின் தொண்டு மகத்தானது

தமது குலதெய்வமான திருப்போரூர் கந்தசாமிப் பெருமானை உள்ளன்போடு வழிபட்டு, வினைப்பயனாக இடையூறுகள் வந்தபோதும் ஒவ்வொரு மாதமும் கிருத்திகை தினத்தன்று திருப்போரூர் வந்து முருகப்பெருமானை தரிசனம் செய்யும் வைராக்கிய மனம் படைத்தவர் பாலு ஜுவல்லர்ஸ் உரிமையாளர் திரு. எஸ். பாலசுப்பிரமணியம் அவர்கள். தெய்வநம்பிக்கையாலும் உழைப்பாலும் உயர்ந்த அமரர் பாலசுப்பிரமணியம் அவர்களின் உயர்ந்த எண்ணத்தில் மலர்ந்ததுதான் பாதமலர்-1 இந்தப் பாதமலர்-2 வெளிவர வழிகாட்டியாக அமைந்த மலராகும்.

பாம்பன் சுவாமிகளையே எவ்வேளையும் துதித்து, பொன்றாப் புகழ் எய்திய பாலசுப்பிரமண்யம் அவர்களின் அன்பு மகன் பாலு ஐயப்பன் அவர்கள் தம் தந்தையின் நெறியில் நின்று பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழுவிற்கும் பாம்பனார் அறக்கட்டளைக்கும் பல்வேறு உதவிகளைப் புரிந்து வருகின்றார். அன்னாரது இல்லத்தில் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் குருபூஜை நாளான இப்புண்ணிய தினத்தன்று இம்மலர் வெளயிடுவது பெருமைக்குரிய செயலாகும்.

ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழும், ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் 6666 அருட்பாக்களில் சில பாடல்களையும் அன்பர்கள் பாராயணம் செய்வதற்கேற்ப, பிரித்தும் தொகுத்தும் பாதமலராக மலரச் செய்துள்ளார்கள்.

அன்பர்கள் இம்மலரில் உள்ள சாத்திரங்களையும் தோத்திரங்களையும் ஓதியும், பாடியும், பிறர்க்குணர்த்தியும், நிறைவாழ்வான இறைவாழ்வு பெற்று இனிதாய் வாழவும், மேலும் பல பாதமலர்கள் சுவாமிகளின் பாக்களால் மலரவும், எல்லாம்வல்ல திருப்போரூர் கந்தசாமி பெருமான் திருவருளும் எம் குரு முதல்வர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் குருவருளும் முன்னின்று அருளுவதாக!

*குமரா நமா என்று கூறினார் ஒர்கால்*
*அமரா வதியான்வர் அன்றி - யமராசன்*
*கைபுகுதார் போகுரன் கால்புகுவார் தாயுதரப்*
*பைபுகுதார் சேரார் பயம்.*

*-ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள்*

போற்றி நின் பேரருள் !!!

ஸ்ரீமத் சிதம்பர சிவஞான சுவாமிகள்
திருப்போரூர் அருள்மிகு கந்தசாமிப் பெருமான் தெய்வத்தான
பரம்பரை ஆதின தர்மகர்த்தர், திருப்போரூர் ஆதினம்.

கையொப்பம்
திருப்போரூர் அருள்மிகு கந்தசாமிப் பெருமான் தெய்வத்தான
பரம்பரை ஆதின தர்மகர்த்தர், திருப்போரூர் ஆதினம்.

தேதி : 12-5-97
திருப்போரூர்.

உ

சிவமயம்

ஓம் குமாரகுருப்யோ நம:

திருச்சிற்றம்பலம்

வாழ்க நின் பேரருள்! வெல்க நின் பேரருள்!!

***சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகள்*** வழங்கிய

## ஆசியுரை

***பாதமலர் மீதில் போத மலர் தூவிப்***
***பாடுமவர் தோழத் தம்பிரானே*** - திருப்புகழ்

'இரை தேடுவதோடு இறையும் தேடு' என்ற குமரகுரு பாம்பன் சுவாமிகள் வாக்கிற்கிணங்க, இறைபற்றே, பக்தியாக உருவெடுத்து, பக்தியால் செவ்வேள் பரமனைப் பலகாலும் பற்றிப் பிறவா முத்தி சேர்வதற்குரிய வழியை வகுக்கின்றது. இம் மார்க்கத்தை குரு பாரம்பரிய அடிப்படையில் நெருங்குதல் முறையான செயலாகும்.

இறைவனுக்கு அர்ச்சனை, பூசை, விழா இவைகளைச் செய்ய பல்வேறு ஆடம்பரங்களைக் கையாண்டாலும் எல்லோரும், அர்ச்சனை செய்யும் வகையில் எளிய முறைகளை நமது ஆன்றோர்கள் எடுத்துக் கூறியுள்ளனர்.

'பெரிய புராணத்தில், அர்ச்சனைப் பாட்டேயாகும் எனவும், பாடுவார்க் கருளும் எந்தை' என திருஞான சம்பந்த சுவாமிகளும், ,தமிழோடிசைப் பாடல் மறந்தறியேன்', என அப்பர் பெருமானும், பொய்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின்' என சுந்தரமூர்த்தி சுவாமிகளும், ,என்புருகிப் பாடுகின்றிலை' என மாணிக்கவாசகப் பெருமானும், பாடுகின்ற பனுவலோர்கள் தேடுகின்ற செல்வமே' என்று தாயுமானவ சுவாமிகளும், முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன்' என, ஸ்ரீமத் அருணகிரிநாதரும், பாடுவார் துயர் தீர்க்க நாயகன்' என ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளும் ***பாடியவன் திருப்பாட்டைப் படிகண்டாய், இன்புலகப் படி கண்டாயே என வள்ளல் பெருமானும்*** திருவாய் மலர்ந்தருளியுள்ளார்கள். எனவே அன்பர்கள் யாவரும் பரமனைப் பாவால் துதிக்கவேண்டும் என்பது மறக்கமுடியாத உண்மையாகும்.

மேற்கூறிய சிவநேயச் செல்வர்களின் உண்மை நெறிகளைப் பின்பற்றி ஒழுகிவரும் பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு அன்பர்கள்

*"தெருளகுணகிரி நாதன் மனமெனென என்றறை*
*திருப்புகழ் துளைத்த செவியோய்"*

என்று பாம்பன் சுவாமிகள் பாராட்டும் முருகப்பெருமானை, பலரும் பாடித் துதிப்பதற்கு ஏற்றவாறு திருப்புகழிலும், சுவாமிகள் பாடலிலும் சில பாடல்களை இம்மலரில் வெளியிட்டுள்ளார்கள். பாதமலர் என்ற அழகிய மலரும் மலரிலுள்ள பாடல்களின் மணமும் படிப்போர் மனதை பக்திப் பரவசத்தில் ஆழ்த்தும் தகமையுடைத்து.

பாதமலர் என்ற புத்தகத்தை செம்மனச் செம்மல், இறைவன் திருவடி அடைந்த பாலு ஜுவல்லர்ஸ் பாலசுப்பிரமணியம் அவர்கள் தங்கமேடு தம்பிக்கலை ஐயன் ஆலயத்தில், பாம்பன் சுவாமிகள் திருவுருவத்தை பிரதிஷ்டை செய்து, கும்பாபிஷேகம் நடத்திய 22.5.92 வெள்ளிக்கிழமை அன்று பாம்பன் சுவாமிகளின் 63-ம் ஆண்டு குருபூஜை நன்னாளில் வெளியிட்டார்கள். அந்த மலரைப் பின் பற்றியே இம்மலர் சற்று விரிவாக வெளியிடப்படுகின்றது.

அன்பர்கள் பயபக்தியுடன் இம்மலரிலுள்ள பாடல் களைப் படித்து அதனால் ஆகும் பயனைப் பெறுவார்களாக,

*—முருகன்*
*நாமம் புகழ்பவர் பாதந் தொழுமினி*
*நாடும் படியருள் புரிவாயே.* - திருப்புகழ்

*வாழி பாம்பனடி சூடி நிலன் மிசையே*
*வாழும் அடியவர்கள் வாழியே*
*வாழி அருளின் வழுவாத அறநெறிசெல்*
*மாசில் தவமுனிவர் வாழியே!*

போற்றி நின் பேரருள்!!!

கையொப்பம் 12-5-97
சோழவரம் தவத்திரு நடேசசுவாமிகள்

உ

சிவமயம்

ஓம் சுப்ரமண்ய பரபிர்ம்மனே நம:

# *பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளின் அருள்ஞான வாழ்க்கை*

இருபதாம் நூற்றாண்டின் இணையில்லா ஞானியாக, ஞானத்தில் பாநுவாக, வேதாகமங்களைக் கற்றுணர்ந்த வித்தகராக, சைவ சித்தாந்தத்தில் சிங்கமாக, தமிழுக்கும் வடமொழிக்கும் பெருமை சேர்க்கும் புலமைத்திறம் பெற்றவராக அவதரித்தவர் *மகாதேஜோ மண்டலகுரு அபராருணகிரி அத்தியாச்சிரம சுத்தாத்வைத வைதீக சைவசித்தாந்த ஞானபாநு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்.* சைவ சமய நெறியாகிய குகநெறியை உலகோர்க்குக் காட்டியவர். தமது பாடல்களாலும் சாத்திரங்களாலும் சுப்பிரமண்ய தத்துவத்தைத் தெளிவுற விளக்கியவர். இவர்போல் இவர்க்கு முன்னரும் இலர், பின்னரும் இலர் என்று புகழப்படுபவர். தமிழுக்கு அணி சேர்த்த தகைமையாளர் நம் சுவாமிகள். அவரது அருள்ஞான வாழ்க்கை வரலாறு தெய்வீக வரலாறாகும்.

பக்தி மணங்கமழும் தமிழ்த்திருநாட்டில் திருவிராமேச்சுரத்தைச் சார்ந்த பாம்பன் என்னும் பதியில் சிவாலயப் பணி செய்து வந்த புண்ணியச் செல்வர் சாத்தப்பப் பிள்ளை என்பவருக்கும், இராமேச்சுரத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி செங்கமல அம்மாளுக்கும் பிரதம புத்திரனாக திருத்தேவை எனப்படும் திருவிராமேச்சுரத்தில், சுவாமிகள் 1848 ஆம் ஆண்டு முதல் 1853 ஆம் ஆண்டு வரையில் உள்ள காலத்தில் ஒரு சுக்கிரவாரஞ் சூரியோதயத்தில் அவதரித்தார். பெற்றோர் தம் அருள்ஞானக் குழந்தைக்கு செவ்வேள் பரமனின் திருப்பெயராகிய *அப்பாவு* எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தனர். அப்பாவு என்பதற்கு தந்தைக்கும் இறைவன் எனப் பொருள்படும்.

அப்பாவு தமது பிள்ளைப் பருவத்தில் முனியாண்டியாபிள்ளை என்பவரிடம் கல்வி பயின்றார். உயர் கல்வியை அவ்வூர்க் கிறித்துவ நிலையத்திலேயே பயின்று

தமது புலமைச் சிறப்பால் பல பரிசுகளையும் பெற்றார். ஆனால் இந்த உலகியற் கல்வியைக் காட்டிலும் மேம்பட்டதான இறையியல் கல்வி அவர்தம் ஆன்மாவினுள்ளே *சிவனுக்குள்ளே சிவமணம் பூத்தது* போன்று, நாளுக்குநாள் மலர்ச்சி பெற்றுக் கொண்டிருந்தது.

ஒருநாள் அப்பாவு தம் நண்பர்களோடு குந்துகால் என்னும் இடத்தில் விளையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவ்வழியே வந்த சோதிடர் ஒருவர் அவரது கைரேகைகளின் அமைப்பையும் நாக்கின் அமைப்பையும் ஆராய்ந்து பார்த்து „மிகவும் விசேடமான அமைப்பு. நீ பெரிய ஞானியாகவும் வாக்குச்சித்தி உடையவனாகவும் எதிர்காலத்தில் விளங்குவாய்" எனக் கூறினார். அப்பாவு இவ்வாறு விளையாட வரும்பொழுதெல்லாம் அபூர்வமான, அதிசயமான, தெய்வக் காட்சிகளைக் கண்டு வியப்பிற்கும் மகிழ்ச்சிக்கும் உள்ளாவார்.

சில காரணங்களால் அவரது உலகியற்கல்வி தடைப்பட்டது, ஆனால் சிவனருளின் உந்துதலால் அவரது ஆன்ம மலர்ச்சி மேலும் மேலும் நறுமணம் பெற்றுக் கொண்டே இருந்தது.

ஒரு நாள் விடியற்காலையில் அப்பாவு தென்னந் தோப்புகளைக் கண்டு வரும்பொருட்டு ஊரின் புறத்தே கிழக்கு நோக்கி நடந்தார். முதலாவதாக இருந்த தோப்பினுள் தம் தந்தையார் இருப்பதைக் கண்டதும் வாயிலின் அருகேயே நின்று கொண்டு கீழ்வானத்தை நோக்கினார். இளஞ்சூரியன் செவ்வேள் பரமனின் பேரொளியைப் பரப்பிக் கொண்டு எழுவதைக் கண்டதும் அவரது உள்ளம் மலர்ந்தது. தமது கையில் வைத்துக் கொண்டிருந்த சஷ்டிகவசம் எனும் நூலைப் பார்த்ததும் சஷ்டி பதியாகிய சண்முகப் பரம்பொருளைத் தாமும் செந்தமிழ்ப்பாடல்களால் பாடித் துதிக்க வேண்டும் என்ற ஓர் உந்துதல் உண்டாயிற்று. உடனே வடக்கு முகமாய் நின்று செவ்வேளைச் சிந்தித்து வந்தனித்து ஆயிடைக் கிடைத்த ஒரு பனையோலையைத் தமதரையிற் செருகியுள்ள வெள்ளிப் பூக்க ளிடப்பட்ட தந்த எழுத்தாணியை யெடுத்து அதனால் வகிர்ந்து ஏடாக்கிக் கொண்டு கீழ்த்திசையை நோக்கிச் சூரியோதயமாத லறிந்து இது நல்ல வேளையென எண்ணிக்கொண்டு, "பெருமானே! உன்னைப் பாடும் பணியை

எனக்கருள்க. நான் ஒவ்வொரு பதிகத்தையும் அருணகிரிநாதப் பெருமானின் பெயரை வைத்தே முடிப்பேனாக. அவரது வாக்குத் திறம் எனக்கும் வருமாறு அருள்புரிய வேண்டும்." இவ்வாறு உளமுருகி வேண்டியதும் பெருமானின் திருவருளால் அவரை அறியாமலேயே அவரது வாய்வழியே ***கங்கையைச் சடையிற் பரித்து*** எனும் மங்கல மொழி வெளிப்படுவதாயிற்று. தொடர்ந்து சொற்கள் அவரது பிரயாசை இல்லாமலேயே வெளிப்பட மிகச் சிறந்த பாடலொன்று பனைஓலையில் பொறிக்கப்பட்டது. கங்கையைச் சடையில் எனத் தொடங்கி ***ஆதியே அமரர்கோவே*** என முடிந்த அப்பாடலை அதே இடத்திலேயே ஒரு முறை உரக்கப் படித்துவிட்டு "இறைவ! பாடலை ஏற்றருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு அவர் "இனி நாள்தோறும் ஒவ்வொரு பாடலை உணவு கொள்வதற்கு முன் பாடவேண்டும். இவ்வாறு நூறு பாடல்களை நாம் பாடுவோமாக'' என முடிவெடுத்துக் கொண்டார். இம்முடிவிற்கேற்ப நூறுபாடல்களை நூறு நாள்களில் பாடி அவற்றை ஒன்றாகத் தொகுத்துத் தெய்வ வணக்கமாக மூன்று பாடல்களைப் பாடி அவற்றை நூலின் முதலில் சேர்த்தார். இவ்வாறு அமைந்த தொகுப்பினை அவர் நாள்தோறும் ஓதிவந்தார்.

அத்தொகுப்பின் தெய்வப் பெருமையை உணர்ந்தார் சேதுமாதவ ஐயர் என்பவர். அவர் சிறந்த முருகபக்தர், சேதுமாதவப் பெருமாள் கோயிலில் அர்ச்சகராகப் பணியாற்றி வந்தவர். நூறு பாடல்களின் மகிமையை உணர்ந்த அவர் அருளிளங் கவிஞராகிய அப்பாவுவைத் தமது இருப்பிடத்திற்கு வரச்சொல்லி மங்கலகரமான விஜயதசமித் திருநாளில் இளங்காலைப் போதில் அக்னிதீர்த்தக் கரையில் அவருக்குத் திருவாறெழுத்து மந்திரத்தை உபதேசம் செய்தார். சமஸ்கிருத நூல்களையும் பயிலவேண்டும் என்று உத்தரவிட்டார்.

நியமம் தவறாது இருந்து வரும் நாளில் ஒருநாள் முருகப்பெருமான் நம் அருட் கவிஞரின் கனவில் ஓர் அழகிய சைவப் பெரியாராகத் தோன்றி அவரை ஒரு கட்டிடத்திற்கு

அழைத்துச் சென்று தூய்மையான இடத்தில் அமர்த்தி வாழை இலையில் சுவைமிகுந்த பாற்சோறு பிசைந்து இட்டு அதனை உண்ணும்படிக் கூறினார்! அவரும் உடனிருந்து உண்டார். உண்டு முடிந்ததும் அருட்கவிஞரை அவரது இருப்பிடத்திற்கு அனுப்பி வைத்தார். கனாநிகழ்ச்சிக்குப் பிறகு அவருக்குப் பாடும் திறனும் தமிழ், வடமொழி நூல்களைப் பற்றிய ஞானத்திறனும் பன்மடங்கு அதிகரித்து விளங்கியது.

இவருக்குத் திருவாறெழுத்தை உபதேசித்தருளிய ஆசிரியரின் வற்புறுத்தலின்பேரில் இவர் மதுரை சின்னக்கண்ணு பிள்ளை புத்திரியாகிய ஸ்ரீமதி காளிமுத்தம்மாளை வெகுதானிய வருடம் (கி.பி. 1878) வைகாசி மாதச் சுபமுகூர்த்தத்தில் திருமணம் செய்து கொண்டு தம் உத்தம பத்தினியோடு பாம்பன் எனும் பதியில் வாழ்ந்து வந்தார்.

திருவருட்செயன் ஞாபகத்தில்:

'பின்ன ரப்பன வன்சொன படியோர்
பெண்ணை மணந்தன ளவளுநல் லவளே'

என்று சுவாமிகள் கூறியவாற்றால் அறியப்படுகிறது.

இவர்கள் முருகையபிள்ளை, சிவஞானாம்பாள், குமரகுருதாசபிள்ளை, என்ற மக்கட் செல்வங்களையும் பெற்று இனிது வாழ்ந்தனர்.

இதற்குப்பிறகு நம் அருட்கவிஞரின் வாழ்க்கையில் முருகப்பெருமான் தம் அருளாற்றலைப் பல வழிகளாலும் காட்டியுள்ளார். தச்சனார் ஒருவரின் கனவில் தோன்றி அவரது உருவத்தைக் காட்டி அவருக்குப் பாதக் குறடு செய்தளிக்கு மாறு ஆணையிட்டமை; மணவாழ்க்கையில் ஈடுபட்ட பிறகு அவரது பெண்குழந்தைக்குத் திருநீறு பூசிச் சென்றமை, அவர்தம் துணைவியார் வீட்டு விலக்காக இருந்த சமயத்தில் அவருக்கு ஏற்பட்ட நோயினைத் துணைவியார் கரத்தாலேயே திறுநீறு பூசச்செய்து போக்கியமை; குடும்பப் பொறுப்பு காரணமாக ஏற்பட்ட வழக்குகளில் பெருமான் தோன்றாத் துணையாகவும் தோன்றும் துணையாகவும் இருந்து வெற்றி பெறச் செய்தமை-இத்தகைய நிகழ்ச்சிகள் எல்லாம் முருகப் பெருமான் தம்மை நம் சுவாமிகளின் வாழ்க்கையில் எவ்வாறு ஈடுபடுத்திக் கொண்டார் என்பதை நன்கு புலப்படுத்துகின்றன.

ஆனால் இத்துணை அளவிற்கு அருள்துணையாக இருந்தும் சுவாமிகள் துறவு நோக்கத்துடன் கூறிய ஒரு பொய்க்காக வேண்டி முருகப்பெருமான் அவரைத் தண்டனைக் குள்ளாக்கியமையை நினைக்கும் போது நம் நெஞ்சம் வருந்தவே செய்கின்றது. *பழநிக்குச் செல்லுமாறு முருகனின் உத்தரவோ?* என்று கேட்ட நண்பரின் கேள்விக்குப் நம் சுவாமிகள் 'ஆம், ஆண்டவன் கட்டளை' என்று கூறிவிட்டார். உடனே முருகப் பெருமான் கோபத்துடன் சுவாமிகளைக் கடிந்து கொண்டு "என் கட்டளை என்று பொய் கூறியதால் இனி நான் உன்னைப் பழநிக்கு வருமாறு கட்டளை இடுகின்ற வரையில் நீ பழநிக்கு வரக்கூடாது'' என்று ஆணையிட்டுவிட்டார். சுவாமிகள் பிழையுணர்ந்து மூன்று பதிகங்கள் பாடினார்.

சுவாமிகளின் வாழ்க்கை மிகவும் தெய்வத் தொடர்பு உடையதாகவே கழிந்து கொண்டிருந்தது. செவ்வேள் பரமனைப் பற்றிப் பாடாத நாளோ, பேசாத நாளோ, அவரது பரமநிலையைக் குறித்துச் சிந்திக்காத நாளோ சுவாமிகளின் வாழ்க்கையில் ஏற்பட்டதில்லை. தலயாத்திரை செய்த போது சுவாமிகளுக்கு காஞ்சிபுரத்தில் ஏற்பட்ட ஓர் அருள் நிகழ்ச்சி மிகவும் வியப்பிற்குரியதாம். எல்லாக் கோயில்களையும் தரிசனம் செய்து விட்டதாகக் கருதிக் கொண்டு சுவாமிகள் தமது ஊருக்குத் திரும்பிவர முற்பட்ட போது வெள்ளைத் தலைப்பாகையும் வெண்ணிற ஆடையும் அணிந்து திருநீற்றுப் பொலிவுடன் வந்த *செம்மேனிச் சைவர்* ஒருவர் அவர் முன் நின்று 'குமரகோட்டம் தரிசித்ததுண்டோ' எனக் கேட்டார். சுவாமிகள் 'அது எங்கே உள்ளது?' எனக்கேட்க, அவர் குமரகோட்டம் வரையிலும் சுவாமிகளை அழைத்துச் சென்று 'அதோ கொடிமரம். அதுதான் குமரகோட்டம்' என்று காட்டிவிட்டுத் திடீரென்று மறைந்து விட்டார். சுவாமிகள் செவ்வேள் பரமனின் கருணைப்பாங்கினை நினைந்து நினைந்து நெஞ்சம் கசிந்தார். ஒருமுறை இராமேசுரப் பெருமாளைத் தரிசித்துக் கொண்டு வரும் போது முருகப்பெருமான் சுவாமிகளின் கனவில் தோன்றி *சிவாலாய வழிபாட்டில் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யத் தவறக் கூடாது* எனக் கட்டளையிட்டருளினார். இது போன்று ஏற்பட்ட அருள் நிகழ்ச்சிகள் பல.

சுவாமிகளின் வாழ்க்கையில் மிகவும் முக்கியம் வாய்ந்த நிகழ்ச்சி அவர் பிரப்பன் வலசை என்னும் சிற்றூரில் செய்த கடுமையான தவமே எனக் கூறலாம்.

அப்பொழுது அவருக்கு வயது சற்றேறக் குறைய நாற்பத்தொன்று எனக் கூறலாம். பிரப்பன் வலசை மயானத்தைத் தமது தவத்துக்குரிய இடமாகத் தேர்ந்தெடுத்தார் நம் சுவாமிகள். மயானத்தில் கீற்றுக் கொட்டகை ஒன்று அமைக்கப்பட்டு அதன் நடுவே ஒருவர் உட்கார்ந்து கொள்ளும் அளவிற்குச் சதுரக்குழி ஒன்று வெட்டப்பட்டது. நாற்புறமும் முள்வேலி இடப்பட்டது. அங்குக் கூடியிருந்த நண்பர்களுக்கெல்லாம் 'கடவுளை மறவாதிருங்கள்' என்று அறிவுரை வழங்கிவிட்டு நம் சுவாமிகள் 'குமரகுரு' 'குமரகுரு' எனக் கூறியவாறே சதுரக்குழியில் அமர்ந்து கொண்டு தியான யோகம் மேற்கொண்டார். பாம்புகள் ஊர்ந்து சென்ற போதும் அவர் அசையவில்லை. மயானக் காடாயிற்றே, பேய்களின் தொல்லைகள் இல்லாமற்போமோ? முதல் ஐந்து நாள் இரவு வரையிலும் ஆறு ஏழு பேய்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு ஆர்ப்பரித்தன. சுவாமிகள் நெஞ்சம் கலங்கவில்லை. பின்னர், பெரிய ஆவிபோன்ற ஒன்று அவரைக் குழியினின்றும் மேலே தூக்கியெடுக்க முயற்சி செய்தது. அவர் தமது யோக தண்டத்தால் அடித்தும் விலகாதது கண்டு திருவாறெழுத்து மந்திரத்தை உச்சரிக்க அந்த முனிப்பேய் அவரைவிட்டு அகன்று மறைந்தது. ஆறாவது நாள் தியானத்தில் தொடர்ந்து இருந்தபோது 'நீ எழுந்துவிடு' எனும் வாக்கு அவருக்குக் கேட்டது. அது பெருமானுடைய வாக்கு என உணர்ந்து கொண்ட சுவாமிகள் "இக்காலத்து மனிதர்களுள் ஒருவரை என் ஞானாசிரியனாக ஏற்றுக்கொள்ள என் மனம் இசையவில்லை. என் ஆண்டவானகிய நீயே எனக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லியருள்க'' என்று உறுதியாகக் கூறிவிட்டார்.

ஏழாவது நாள் இரவில் சடைமகுடம் உடைய இரண்டு முனிவர்களுடன் முண்டிதமில் சிறுசிகையு மிடையிலணி கவுசனையு முழுமதிய மென மிளிரு முகமுமுடைய ஓர் இளைஞர் சுவாமிகளின் முன்னே தோன்றினார். இளைஞர் சுவாமிகளுடன் உரையாடாமல் இருப்பதைக் கவனித்த

இரண்டு முனிவர்களும் "மிகவும் தீவிரதரமான பக்குவம் வாய்ந்த இவர் உமது உபதேச மொழியைக் கேட்கவே இவ்வாறு கடும் தவம் செய்கிறார்" எனக் கூறியதும் இளைஞர் சுவாமிகளின் பக்கமாகத் திரும்பி ஓர் இரகசிய வார்த்தையை உபதேசித்துவிட்டு முனிவர்கள் பின்தொடர மேற்குத்திசைப் புறமாகச் சென்று மறைந்து விட்டார்.

தமக்குக் கூறப்பட்ட ஒருமொழியே திருமறை என உணர்ந்த நம் சுவாமிகள், அவ்விடத்தை விட்டு நீங்க மனமில்லாமல் குழியில் இருந்த வண்ணமே தொடர்ந்து நிட்டையில் இருந்தார். இவ்வாறு இருபத்தேழு நாள்கள் (அதாவது அவர் தவம் தொடங்கி முப்பத்து நான்கு நாள்கள்) கழிந்தன. முப்பத்தைந்தாம் நாள் இரவு மூன்றாம் யாமம் முடியும் தருணத்தில் பெருந்தொனி ஒன்று உண்டாயிற்று, அதைத் தொடர்ந்து வானில் ஒளியும் படர்ந்தது. "ஏகாதச ருத்திரர்கள் வருகின்றனர். நீ எழுந்து விடு" என ஒரு வாக்கு அவருக்குக் கேட்டது. "நான் எவர் கூறினும் எழமாட்டேன். செவ்வேள் பரமனின் கட்டளை கிடைத்தால் மட்டுமே எழுவேன்" என்று சுவாமிகள் கூற "வேளின் கட்டளையே இது எழுக" என்று ஆணை பிறந்ததும் சுவாமிகள் உச்சிமேற் கரம் கூப்பிக் கொண்டு எழுந்துவிட்டார். அவ்விடத்தை மும்முறை வலம் வந்து தண்டாகாரமாக வணங்கி எழுந்து முள்வேலி கடந்து வெளியே வந்தார். மேற்றிசை வானில் முழுநிலவு ஒளிர்வது கண்டு அது சித்திரைப் பௌர்ணமி நாள் என உணர்ந்து கொண்டார். சுவாமிகள் நிட்டையினின்றும் நீங்கி வெளிவந்து விட்டார் என அறிந்ததும் நண்பர்களும் அன்பர்களும் பெருந்திரளாகக் கூடி அவரைத் தரிசித்து ஆசி பெற்றனர்.

நிட்டையின் போது அவருக்குக் கிடைத்த உபதேசம் நிதியின் திரட்சியாக அவர் உள்ளத்தே திரண்டது. அதுவே பின்னர்த் தகராலய ரகசியம் எனும் நூலாக வடிவெடுத்தது. இவ்வாறு நிட்டை செய்து நிதியம் தேடிக்கொண்ட பிறகு அதற்கு அடுத்த ஆண்டில் சுவாமிகள் துறவறம் மேற்கொண்டார். பாம்பன் பதியை நீங்கி உத்தரகோச மங்கை முதலான தலங்கள் வழியாக மதுரையை அடைந்தார்! இரயிலில் பயணம் செய்து சென்னைக்கு வந்தார்.

சென்னையை அடைந்தது முதற்கொண்டு நம் சுவாமிகளுக்கு ஏற்பட்ட அருள் அனுபவங்கள் மிகப்பல. "மாசில் அடியார்கள் வாழ்கின்ற ஊர்சென்று, தேடி விளையாடிய யங்ஙனே நின்று", என்று அருணகிரிப் பெருமான் கூறுவதற்கிணங்க நம் சுவாமிகள் சென்று தங்கிய இடங்களுக்கெல்லாம் செவ்வேள் பரமனும் உடன் சென்று துணை நின்றான். சுவாமிகளின் திருவடிகள் பதிந்த சென்னை நகரத்து வீதிகள் எல்லாம் செவ்வேள் பரமன் விளங்கும் சிவலோக வீதிகளாக விளங்கின. குமாரனந்தம் எனப் பெயர்பூண்ட அன்னையார் முதலாகப் பற்பல அன்பர்கள் சுவாமிகளுக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் அளித்து வந்தனர். துறவறம் மேற்கொள்வதற்கு முன்பிருந்தே அவர் உப்பும் புளியும் அறவே நீத்து பச்சரிசியும் பச்சைப்பயறும் கலந்த உணவை மட்டுமே உண்ணும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தார். அப்பழக்கத்தை அவர் விடாமல் கடைப்பிடித்திருந்தார். துறவறம் மேற்கொண்ட பிறகும் 'இருக்கும் இடம் தேடி' அருளின் தூண்டுதலால் உணவு வந்தாலொழிய துறவுக்குரிய விதியை அனுசரித்து அவர் எதையும் யாரிடமும் யாசித்துப் பெற மாட்டார். நாரத பரிவ்ராஜகம் முதலான உபநிஷத்துக்களிலும் சிவாகமங்களிலும் கூறப்பட்டுள்ள சந்நியாசாசிரமத்து விதிமுறைகளைத் தவறாமல் கடைப்பிடித்துத் துறவுநெறிக்கோர் இலக்கணமாகத் துலங்கியவர் நம் சுவாமிகள். வேடப் பகடிகள் மலிந்துள்ள இக்காலத்தில் வேதத் துறவரசராக விளங்கிய நம் சுவாமிகளின் வாழ்க்கை நெறி சமயநெறிப்பட்ட எல்லா அன்பர்களாலும் அவசியம் உணரப்பட வேண்டிய ஒன்றாகும்.

சென்னை நகரத்தில் வசித்த போது நம் சுவாமிகள் தகுதியும் பக்குவமும் வாய்ந்த அன்பர்கள் பலருக்குப் ஞானதீக்ஷை அருளித் திருவாறெழுத்து மந்திரத்தையும் உபதேசித்தருளினார்.

ஏறக்குறைய ஓராண்டு காலம் கழிந்த பிறகு சுவாமிகள் சிதம்பரத்துக்கு அருகே உள்ள குயவன் பேட்டை எனும் இடத்தில் குகசிந்தனை நிறைந்தவராய்த் தங்கியிருந்தார். அச்சமயத்தில்தான் சுவாமிகள் பரிபூரணானந்த போதம், தகராலய ரகசியம் எனும் ஒப்பற்ற சாத்திரங்கள் இரண்டையும்

உருவாக்கினார். கந்தர் ஓலியல் அந்தாதி, குகப்பிரம அருட்பத்து முதலான தோத்திரங்களையும் பாடினார். திருப்பா எனப்படும் வேதசமானமான நூலையும் பாடத் தொடங்கினார். சிதம்பரத்தினின்றும் கும்பகோணம் முதலான பல தலங்களுக்கும் சென்று மீண்டும் சிதம்பரம் வந்ததும் செவ்வேள் பரமன் அவருக்குச் சென்னை செல்லுமாறு ஆணையிட்டு அருளினான். அருளாணை ஏற்று சென்னை அடைந்த அவர் அங்கிருந்தவாறே பல தலங்களைக் குறித்த பதிகங்களும் பாடியருளினார்.

கி.பி. 1902-ஆம் ஆண்டில் சுவாமிகள் காசியாத்திரையை மேற்கொண்டார். இந்த வடநாட்டுப் பயணத்தில் செவ்வேள் பரமன் அவருக்கு நேர இருந்த பல விபத்துக்களிலிருந்தும் காப்பாற்றி அருளினான். பிரப்பன்வலசையில் பெருந்தவம் செய்து பெருமானின் தரிசனமும் உபதேசமும் பெற்ற பிறகு சுவாமிகள் வெண்கோ வணமும் வெள்ளை மேலாடையுமே அணியத் தொடங்கினார். துறவு நெறியை மேற்கொண்ட பிறகும் அதே வெண்மைப் பொலிவுதான்! ஆனால் வெண்மையைச் செம்மையாக்க வேலவன் விரும்பினான் போலும்! காசியில் உள்ள குமரகுருபர சுவாமிகள் திருமடத்தில் நம் சுவாமிகள் தங்கியிருந்த போது அவரது மேலாடை காணாமற்போகக் காவியாடை அணிந்த பெரியவர் ஒருவர் சுவாமிகளின் திருமேனியில் காவியாடை போர்த்து அணிவித்து விட்டுக் கூறினார்: *சுவாமி! இது குமரகுருபர சுவாமிகள் திருமடம். தங்கள் திருப்பெயரும் அப்பெரியாரின் பெயரை எதிரொலிக்கின்றது. இக் காவியாடை இரண்டையும் பெற்றுக் கொள்ள வேண்டும். மறுக்க வேண்டாம்* இவ்வாறு பெரியவர் கூறியதும் அவ்வாக்கினைக் குமரகுருபரனின் திருவாக்காகவே மதித்துக் காவியாடையின் செவ்வொளிக்குள் தம்மை உட்படுத்திக் கொண்டார். காசியாத்திரையின் போது அவரது புறப்பொலிவில் ஏற்பட்ட மாற்றம் இது! இறையருளால் இயல்பாக ஏற்பட்ட மாற்றம்!

சென்னைக்கு வந்தவுடன் தமது பயண அனுபவங்களும் அருள் அனுபவங்களும் அத்துவிதம் எனப்படும் தத்துவத் தொடர்பான நுண்ணிய விளக்கங்களும் வேறுபல அரிய விளக்கங்களும் செறிந்து விளங்கும் வண்ணம் காசியாத்திரை எனும் அரிய நூலொன்று அருளினார். மற்ற மடாதிபர்களின்

காசியாத்திரை நூல்கள் வெறும் பயண நூல்களே! ஆனால் மகாதேஜோ மண்டலாதிபரான நம் அருள் வள்ளலின் காசியாத்திரையோ தத்தவக் கருவூலம்!

சென்னையில் இருந்தபோது பழவேற்காடு, திருப்பாலைவனம், பொன்னேரி, ஆண்டார் குப்பம், திருவொற்றியூர் முதலான இடங்களுக்கெல்லாம் சென்று இறை தரினம் பெற்று விதேக முக்தியில் தீராத வேட்கை உடையவராய்த் தீவிர நிட்டையில் இருந்துவந்தார். குறிப்பிட்ட இக்கால எல்லையில் அவர் பசித்துன்பம் முதலானவற்றிற்கு உள்ளானார். அவரிடம் உபதேசம் பெற்ற சில புண்ணியவான்களும் அவர் சித்துக்கள் ஏதும் செய்யதாதது கண்டு ஏமாற்றம் அடைந்து விலகி விட்டனர். உறுதி வாய்ந்த நம்பிக்கையுடன் சில அன்பர்கள் அளித்த உதவியால் தான்அவர் ஓரளவு துன்பத்தினின்று நீங்கி இருக்க முடிந்தது. இச்சமயத்தில் அவரால் பாடப்பட்டதே குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி எனும் நூல். வடசொல் கலவாது பாடவேண்டும் என்ற நோக்கில் அவர் ***சேந்தன் செந்தமிழ்*** எனும் நூலையும் இயற்றினார்.

நிட்டையில் இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் அவர் சிதம்பரத்துக்கு அருகில் உள்ள பின்னத்தூர் எனும் ஊருக்குச் சென்றார். மணிவாசகப் பெருமான் ஊமைப் பெண்ணைப் பேசவைத்தருளிய தலம் அது என்பதை அருளால் உணர்ந்து கொண்ட சுவாமிகள் அங்கே சிவநிட்டையில் இருக்கத் தீர்மானித்தார். ஆனால் சிவசண்முகப் பெருமானின் அருள் அவரை வேறு திசையில் திருப்பியது. பின்னத்தூரிலும் காட்டுமன்னார்குடி முதலான வேறுபல ஊர்களிலும் வாழ்ந்திருந்த வைணவர்கள் தமது வைணவ சமயக் கோட்பாட்டையும் புரிந்து கொள்ளாமல் சைவசமய உண்மையையும் தெரிந்து கொள்ளாமல் விபூதியைத் தூஷித்தும் ருத்திராக்ஷத்தை இகழ்ந்தும் சிவலிங்க வடிவத்தைத் தாழ்த்திக் கூறியும் சிவனடியார்களுக்குக் கேடுகள் விளைவித்தும் பல கொடிய துன்பங்களை விளைவித்தனர். தாம் எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட அத்தியாச்சிரமி என இருந்தாலும் சுவாமிகள் இத்தகைய கொடிய செயல்கள் தவிர்க்கபட்ட வேண்டும் எனும் உறுதி பூண்டவராய்ப் போரில் இறங்கினார். நீதி மன்றங்களில் வழக்குகள் நடைபெற்றன;

விவாதங்கள் நடைபெற்றன. நீதிமன்றத் தீர்ப்புகள் எல்லாம் சுவாமிகளின் கொள்கைகளை உறுதிப்படுத்துவனவாகவே திகழ்ந்தன. நூற்றெட்டு உபநிடதங்களும் ஆகமங்களும் வேதங்களும் சைவ சிந்தாந்தத்தை உறுதிப்டுத்துபவையே என்பதை விளக்கி அவரால் எழுதப்பட்ட நூலே *சைவ சமய சரபம்*. தகர்க்க முடியாத சைவக் கோட்டையாக அந்நூல் திகழ்கின்றது. சைவத்தின் பெருமையை நிலைநாட்ட அவர் எடுத்துக் கொண்ட தீவர முயற்சிகள் பல, அத்துணையும் வெற்றி பெற்றன.

சுவாமிகள் மீண்டும் சென்னைக்கு வந்தார். இம்முறை புதுப்பாக்கம் எனும் பகுதியில் தங்கியிருந்து தாம் முன்னர் அருளிய *பரிபூரணானந்த போதம்* எனும் நூலுக்குச் *சிவசூரியப்பிரகாசம்* எனும் உரையையும் *தகராலய ரகசியம்* எனும் நூலுக்கு *சதானந்த சாகரம்* எனும் உரையையும் எழுதி வெளியிட்டார். தமக்கு ஏற்பட்ட ஒரு துன்பத்திலிருந்து நீங்கவேண்டிச் சுவாமிகளால் *கி.பி. 1891ல் சக்தி வாய்ந்த சண்முக கவசம்* பாடப்பட்டது போன்றே இம்முறையும் தமக்குற்ற வெப்புநோய் நீங்கும் நிமித்தமாக *1918 ஆம் ஆண்டில் குமாரஸ்தவம்* பாடப்பட்டது. குகனடியார்களுக்கு இவ்விரண்டும் மிகப் பெரிய ஔடதங்களாகும். *சிவஞான தீபம்* முதலான உரைநடை நூல்களையும் சுவாமிகள் வரைந்தருளினார்.

முதல்வன் புராணமாகிய கந்தபுராணத்தை மூல நூலோடு முரண்படாத வகையில் பாடவேண்டும் எனும் நோக்கத்துடன் சுவாமிகள் *ஸ்ரீமத் குமாரசுவாமியம்* எனும் காவியத்தை வரையத் தொடங்கினார். ஐந்து காண்டங்களால் புராணத்தை முடித்த பிறகு பல்வேறு கோயில்களுக்கும் சென்று அவ்வப்போது பாடிய பதிகங்களையும் அக்காப்பிய நூலோடு இணைத்துக்கொண்டு வந்தார். இவ்வாறு காப்பியம் பெரிதாகிக் கொண்டு வரும் போது சுவாமிகள் 1923 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் ஆபத்துக்கு உள்ளானார். தம்பு செட்டித்தெருவழியாக வந்துகொண்டிருந்தபோது குதிரை வண்டியின் சக்கரம் அவரது இடதுகாலில் ஏறிச் சென்றதால் கால் எலும்பு முறிந்து விட்டது. அரசினர் பொது மருத்துவமனையில் உடனே அவர் சேர்க்கப்பட்டார். காலினை ஆராய்ந்த மருத்துவர்கள் எலும்பு இணைவது கடினம்

எனக்கூறிவிட்டனர். சுவாமிகளுக்கு நேர்ந்த ஆபத்தைக் கேட்டவுடன் அன்பர்கள் பலரும் திரண்டு வந்து பார்த்தனர். சுவாமிகளின் சீடர் சுப்பிரமணிய தாசர் என்பவர் சுவாமிகளின் கால் குணமாக வேண்டிச் சண்முக கவச பாராணத்தைத் திடபக்தியுடன் நடத்தினார். மிகவும் சிரத்தையுடன் பாராயணத்தைச் செய்த சுப்பிரமணியதாசருக்கு சுவாமிகளின் முறிந்தகால் தரிசனமாயிற்று. மீண்டும் தொடர்ந்து பாராயணம் செய்தபோது முறிந்த எலும்புகளை இரண்டு வேல் முனைகள் இணைத்து நிற்பது போலவும் அடியிலே ஒரு வேல்முனை தாங்கிநிற்பது போலவும் அவரது கண்களுக்குத் தரிசனம் தெரிந்தது. இவரது தரிசனம் போலவே சுவாமிகளின் கால் எலும்புகள் கூடியிருப்பது கண்டு மருத்துவர்கள் வியந்து நின்றனர்.

மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட பதினோராம் நாள் இரவில் சுவாமிகள் படுக்கையில் இருந்தவாறே ஓர் அற்புதமான தெய்வக் காட்சியைக் கண்டார். மேற்குத் திசையிலிருந்து குமரப் பெருமானின் வாகனங்களாகிய இரண்டு மயில்கள் நடனமாடிக் கொண்டே சுவாமிகளை நோக்கி வந்தன. வலப்புறம் இருந்த மயில் மிகவும் பெரியது; அது தன் தோகையை விரித்து வானவெளி முழுவதையும் மறைத்திருந்தது. இடப்புறத்தே இருந்தது ஓரளவு குறைந்த வடிவுடையதாக இருந்தது. இத் தெய்வக் காட்சியைக் கண்டு சுவாமிகள் கைகூப்பி வணங்கிக் களிப்புமிகுந்தவரானார். மற்றும் ஒருநாள் தம்முடன் *செந்நிறக் குழந்தை* ஒன்று படுத்திருந்ததைக் கண்டு மிகவும் ஆனந்தம் கொண்டு அறுமுகவள்ளலின் திருப்பெயர்களை ஓதினார். "இன்னும் பதினைந்து நாள்களில் புண் ஆறிவிடும். அதுவரை மருத்துவமனையைவிட்டு வெளியே போகவேண்டாம்" எனும் திருவாக்கு அவருக்கு வெளிப்பட்டது. அவ்வண்ணமே பதினைந்து நாள்களில் குணப்பட்டுவிட, நம் சுவாமிகள் புதுப்பாக்கம் சென்று தங்கினார்.

தாம் கண்ட அற்புத மயில்வாகனக் காட்சியை அசோக சால வாசம் எனும் பெயரில் எட்டுப்பதிகங்களாக வரைந்து ஸ்ரீமத் குமாரசுவாமியம் எனும் காப்பியத்தோடு சேர்த்தார். இவ்வருட் காட்சியைப் போற்றும் வண்ணம் ***மயூரவாகன சேவனம்*** என்ற பெயரில் ஆண்டு தோறும் விழாவையும்

நடத்தினார். மயூர வாகன சேவன விழா ஆண்டு தோறும் மார்கழித் திங்கள் வளர்பிறைப் பகுதியின் முதல் நாள் அன்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

சுவாமிகள் பெங்களூர் சென்றிருந்த போது ஒரு பேரொளி தம்மைச் சூழ்ந்து வாய்வழியே நுழைந்து இதயத்தை மேலெழுப்புவது போன்ற அனுபவத்துக்கு உள்ளானதும், மின்சார விளக்கு அணைந்தபோது நான்கு தீவர்த்திப் பந்தங்கள் தம்மைச் சூழ்ந்து ஒளிகொடுப்பது போன்ற அனுபவத்துக்கு உள்ளானதும் குறிப்பிடத்தக்கவையாம்.

சுவாமிகள் படிப்படியாக அன்னத்தையும் நீத்துவிட்டார். சிறிதளவு கோதுமை நொய்க்கஞ்சியே அவருக்கு உணவாக அமைந்தது. இறைவனின் திருவுளக் குறிப்பை உணார்ந்து கொண்ட சுவாமிகள் தம் சீடர் சின்னசாமிப் பிள்ளை என்பவரை அழைத்துத் திருவான்மியூரில் நிலம் பார்க்கச் சொன்னார். தம் எழுத்துப் பணியால் தாம் சேர்த்திருந்த தொகையைக் கொடுத்து நிலத்தை வாங்க ஏற்பாடு செய்தார். சுவாமிகளின் திருமேனியில் வெப்பம் மிகுதிப்பட்டது. மீண்டும் பெங்களூர் செல்லலாம் எனத் துணிந்து அதற்கான ஏற்பாடுகள் செய்தும் களைப்பு மேலீட்டாலும் வெம்மை மிகுதியாலும் பயணம் தடைப்பட்டது. அன்று *குருவாரம் (30-5-1929) காலை 7-15 அளவில் சுவாமிகள் சுவாசத்தை உள்ளுக்கு இழுக்க அது வெளிவராமல் உந்தியிலேயே அடங்கியது.*

சுவாமிகள் குகானந்த வடிவடைந்த நாள் வைகாசித் திங்களின் தேய்பிறைப் பக்கத்தின் ஆறாவது நாள் ஆகும். ஆண்டு தோறும் குருபூஜை விழாவாக இந்நாள் கொண்டாடப்பட்டு வருகிறது.

ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்

திருவடி வாழ்க!

வாழ்க! வாழ்க! நீடுவாழ்க!

உ

சிவமயம்

ஓம் குமாரகுருப்யோ நம:

திருச்சிற்றம்பலம்

## குமாரதாசன் என்னும் பெயரிய அத்தியாச்சிரமி
## *ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள்*

### வரலாறு

இறை சிந்தனையும் புலமைத் திறனும் கொண்ட துறவியை தம் குருவாக ஏற்பதற்காக விழைந்தவர் பாலசுந்தர சுவாமிகள், இளமை முதற்கொண்டு துறவியான இவரின் கருத்துப்படி ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாசரை குருவாக ஏற்று பணிவிடைப் புரியலானார்.

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் திருவாக்கினால் குமாரதாசன் என்ற தீட்சாநாமம் பெற்று அவரால் காவியணிந்து உபதேசம் பெற்றவர்.

ஆங்கிலம், வடமொழி, தமிழ் மும்மொழிகளிலும் புலமை பெற்றவர். தமது குருநாதர் 6666 பாடல்களால் முருகப் பெருமானை புகழ்ந்ததையே உயர்வாக எண்ணி தாம் பாடும் நோக்கத்தைக் கைவிட்டார். இத்தன்மை அவரது குருபக்தியின் உயர்வை தெரிவிக்கிறது. இருப்பினும் தமது குருவான பாம்பன் சுவாமிகளுக்கு யாவரும் போற்றும் வகையில் சோடச நாமார்ச்சனை செய்து நாம் வழிபடவும் உதவியுள்ளார்கள்.

தம் குருநாதர் மீது வைத்த பேரன்பு காரணமாக 1945 ஆம் ஆண்டு திருத்தணிகையில் சுவாமிகள் பெயரால் மகேஸ்வர பூசை ஆரம்பித்து வைத்தார். அது முதற்கொண்டு பாலசுந்தர சுவாமிகளுடன் இருந்து மகேஸ்வர பூசையை நடத்திக் கொண்டு வந்தவர் ***சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகள்.***

1952 ஆம் ஆண்டு மயூரபுர பாம்பன் சுவாமிகள் மடாலயத்தின் மடாதிபதியாக பட்டமேற்று, மடாலயத்தின் வளர்ச்சிக்கு முன்னோடியாயிருந்தார். தம் வாழ்நாள் முழுதும் தமது குருவையே எண்ணத்தில் நினைந்து 1967 ஆம் ஆண்டு

புரட்டாசித் திங்கள் *மஹாளய அமாவாசை திதியில் சமாதிநிலை* அடைந்தார்.

ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகளின் மறைவிற்குப் பின்னரும் நடேச சுவாமிகளால் தொடர்ந்து நடத்தி வரப்பெற்ற மகேஸ்வர பூசை தற்போது பழநி பாதயாத்திரைக் குழுவினரால் *'பாம்பன் விழா'* என்ற பெயரில் ஒவ்வொரு வருடமும் டிசம்பர் 25-ம் நாளில் தொடர்ந்து நடத்தப்படுகிறது.

ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகளுடன் இருந்து தொண்டு புரியும் பேறு பெற்றவர்கள் சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகள், மற்றும் குரோம்பேட்டை ஆரிமுத்து ஆச்சாரிய சுவாமிகள் ஆவார்கள். சுவாமிகளுடன் முதன்முதலில் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளுக்குக் கோயில் கட்டி, பூசை செய்வதற்கு இவர்கள் எடுத்துச்செய்த பணிகள் பலப்பல.

ஸ்ரீமத் பாம்பன்சுவாமிகளின் ஆசியும் *ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகளின்* ஆசியும் பெற்ற சோழவரம் தவத்திரு நடேச சுவாமிகளின் பூசை விதிமுறைகளுக்கேற்ப ஒழுக்க நெறிகளையும், பூசை முறைகளையும் கையாண்டு, பாம்பனார் பழநி பாதயாத்திரைக் குழு செயல்படுகிறது.

குமாரதாசன் என்னும் பெயரிய
ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள் திருவடி வாழ்க!
வாழ்க! வாழ்க! நீடுவாழ்க!



13

உ
சிவமயம்
குஹப்ரஹ்மணே நம:
திருச்சிற்றம்பலம்

## முன்னோன் துதி

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பூவார்செஞ் சென்னியுடைப் புங்கவருந் தாபதரும்
புகழ்ந்து போற்றுந்
தேவாகி யடியவருக் கனுதினமு மருள்கூர்ந்து
சிறுகொன் றில்லா
மாவாழ்வு நல்குகுகப் பெருமானுக் கொருதுணையா
வளர்முன்னோனை
நாவார வேவாழ்த்தி யிந்நூனன் முடிவுறுவா
னயந்து கொள்வாம்.

- தகராலய ரகசியம்

## தங்கவம்பலம்

மடமோட்டுங் கருணைதனை மறவேனெஞ் சுளவளவு
மாற்றார் நூலைத்
தொடமாட்டே னவருரைக்கு முரைகேளே னனியாயத்
தொடக்கர் கோட்குட்
படமாட்டே னருள்சுரந்து வினாயவொரு மொழிப்பயனிற்
படரு நோக்கம்
விடமாட்டே னினிதளித்தி யெனதுகுகப் பிரமமென
விளங்கெம் மானே.

- திருப்பா

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# விண்ணப்பம்

சகச்சிரநாமாமிருததோத்திரத்தை / அஷ்டோத்திரத்தை / குமாரஸ்தவத்தை சொல்லப் புகுவோர், முதலில் -

"பரமஞானிகட்கு யாண்டும் வெளிப்பட்டு நிற்கத்தக்க அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாய், பக்த கோடிகளை ஆண்டருணிமித்தம் அரிய திருவருளையே திருமேனியாகக் கொண்டெழுந்தருளிய மங்கள மூர்த்தியாய், தாசர்கள் பேரிற் றயவு கூரிறையாய், கலியுகவரத பிரசன்ன சைவகர்த்தவ் வியமாய் விளங்காநின்ற சண்முக பரம்பொருளே! நின் சகச்சிரநாமாமிருததோத்திரத்தை / அஷ்டோத்திரத்தை / குமாரஸ்தவத்தை இஞ்ஞான்று அன்போடுஞ் சொல்லத் துணிந்தேன். (முழு) மடவோனாகிய யான் சொல்லு மொழுங்கிலே சொற்குற்றம், பொருட்குற்றம் முதலியன தோன்றுமாயின், அவைகளைப் பொறுத்து, ஆனந்த பூர்த்தியாய் அங்கீகரித்தருளுமாறு நின்றி ருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன்".

என்று விண்ணப்பித்துக் கொள்வாராக.

உ

சிவமயம்



# விநாயகர் சோடசம்

| | | |
|---|---|---|
| ஓம் | ஸுமுகாய | நம: |
| ஓம் | ஏகதந்தாய | நம: |
| ஓம் | கபிலாய | நம: |
| ஓம் | கஜகர்ணகாய | நம: |
| ஓம் | லம்போத ராய | நம: |
| ஓம் | விகடாய | நம: |
| ஓம் | விக்னஹர்த்ரே | நம: |
| ஓம் | கணாதிபாய | நம: |
| ஓம் | தூம் ரகேதவே | நம: |
| ஓம் | கணாத்யக்ஷாய | நம: |
| ஓம் | பாலசந்த்ராய | நம: |
| ஓம் | கஜாநநாய | நம: |
| ஓம் | வக்ர துண்டாய | நம: |
| ஓம் | சூர்பகர்ணாய | நம: |
| ஓம் | ஹேரம்பாய | நம: |
| ஓம் | ஸ்கந்த பூர்வஜாய | நம: |

*நாநாவித பரிமள மந்த்ர புஷ்பாணிம் பூஜயாமி.*

*ஓம் சாந்தி!* *சாந்தி!!* *சாந்தி!!!*

உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் அருளிய

# குமாரஸ்தவம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஓம் | ஷண்முக | பதயே | நமோ | நம: |
| 2. | ஓம் | ஷண்மத | பதயே | நமோ | நம: |
| 3. | ஓம் | ஷட்க்ரீவ | பதயே | நமோ | நம: |
| 4. | ஓம் | ஷட்கிரீட | பதயே | நமோ | நம: |
| 5. | ஓம் | ஷட்கோண | பதயே | நமோ | நம: |
| 6. | ஓம் | ஷட்கோச | பதயே | நமோ | நம: |
| 7. | ஓம் | நவநிதி | பதயே | நமோ | நம: |
| 8. | ஓம் | சுபநிதி | பதயே | நமோ | நம: |
| 9. | ஓம் | நரபதி | பதயே | நமோ | நம: |
| 10. | ஓம் | ஸுரபதி | பதயே | நமோ | நம: |
| 11. | ஓம் | நடச்சிவ | பதயே | நமோ | நம: |
| 12. | ஓம் | ஷடக்ஷர | பதயே | நமோ | நம: |
| 13. | ஓம் | கவிராஜ | பதயே | நமோ | நம: |
| 14. | ஓம் | தபராஜ | பதயே | நமோ | நம: |
| 15. | ஓம் | இஹபர | பதயே | நமோ | நம: |
| 16. | ஓம் | புகழ்முநி | பதயே | நமோ | நம: |
| 17. | ஓம் | ஜயஜய | பதயே | நமோ | நம: |
| 18. | ஓம் | நயநய | பதயே | நமோ | நம: |
| 19. | ஓம் | மஞ்சுள | பதயே | நமோ | நம: |
| 20. | ஓம் | குஞ்சரீ | பதயே | நமோ | நம: |
| 21. | ஓம் | வல்லீ | பதயே | நமோ | நம: |
| 22. | ஓம் | மல்ல | பதயே | நமோ | நம: |
| 23. | ஓம் | அஸ்த்ர | பதயே | நமோ | நம: |
| 24. | ஓம் | சஸ்த்ர | பதயே | நமோ | நம: |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 25. | ஓம் | ஷஷ்டீ | பதயே | நமோ | நம: |
| 26. | ஓம் | இஷ்டி | பதயே | நமோ | நம: |
| 27. | ஓம் | அபேத | பதயே | நமோ | நம: |
| 28. | ஓம் | ஸுபோத | பதயே | நமோ | நம: |
| 29. | ஓம் | (வ்) வியூஹ | பதயே | நமோ | நம: |
| 30. | ஓம் | மயூர | பதயே | நமோ | நம: |
| 31. | ஓம் | பூத | பதயே | நமோ | நம: |
| 32. | ஓம் | வேத | பதயே | நமோ | நம: |
| 33. | ஓம் | புராண | பதயே | நமோ | நம: |
| 34. | ஓம் | (ப்) பிராண | பதயே | நமோ | நம: |
| 35. | ஓம் | பக்த | பதயே | நமோ | நம: |
| 36. | ஓம் | முக்த | பதயே | நமோ | நம: |
| 37. | ஓம் | அகார | பதயே | நமோ | நம: |
| 38. | ஓம் | உகார | பதயே | நமோ | நம: |
| 39. | ஓம் | மகார | பதயே | நமோ | நம: |
| 40. | ஓம் | விகாச | பதயே | நமோ | நம: |
| 41. | ஓம் | ஆதி | பதயே | நமோ | நம: |
| 42. | ஓம் | பூதி | பதயே | நமோ | நம: |
| 43. | ஓம் | அமார | பதயே | நமோ | நம: |
| 44. | ஓம் | குமார | பதயே | நமோ | நம: |

---

ஓம் அயில் வாழி! மயில் வாழி! சேவல் வாழி!

உ

சிவமயம்

# குமார சோடசம்

சுபேசோபனே முகூர்த்தே அத்ய ஸர்வசுபதினே திருவான்மியூர் ஸ்ரீமத் பாம்பன் அடிகளார் மடாலயஸ்ய கிங்கராணாம்.......நாமதேயஸ்ய க்ஷேமஸ் தைர்ய வீர்ய விஜய ஆயுராரோக்கிய ஐஸ்வர்யாபி விர்த்யர்த்தம் குமார சரண கமலௌ சோடசநா மார்ச்சன பூஜாம் கரிஷ்யே.

ஓம் ஸௌம் மயூராரூட சகல மங்கள கோல வேதசதகீத, வேத ரசகந்த குமார குருப்யோ நம:
ஓம் ஸௌம் சக்தி பாணயே நம:
ஓம் ஸௌம் குக்குடத் வஜாய நம:
ஓம் ஸௌம் சர்வக் ஞத்வா திகுண மூர்த்திக் ருதஷடாய நாயநம:
ஓம் ஸௌம் ஷடக்ஷர லிபிமந்த்ராய நம:
ஓம் ஸௌம் பாம்பன் முனிவராதி ஷண்முனீந்தராநு கூலாய நம:
ஓம் ஸௌம் த்விஷட் புஜாய நம:
ஓம் ஸௌம் த்ரிஷண்ணய நபங்கஜாய நம:
ஓம் ஸௌம் தகராலய குஹப் ரஹ்மணே நம:
ஓம் ஸௌம் மோஹாந்தகார நிவர்த்தகாய நம:
ஓம் ஸௌம் தநுகரண புவனபோ கோபகாராய நம:
ஓம் ஸௌம் தாசதயாளவே நம:
ஓம் ஸௌம் தேவதா ஸார்வபௌமாய நம:
ஓம் ஸௌம் கலியுக வரதாய நம:
ஓம் ஸௌம் சங்க பத்ம நிதீனாஞ்ச கோடிபி பரிஸேவிதாய நம:
ஓம் ஸௌம் சாந்தாத்ரி (தணிகைமலை) நிலைய அகிலாண்ட கோடி ப்ரஹ் மாண்ட நாயக ஸ்ரீவல்லீதேவசேனா சமேத ஸ்ரீ சுப்ரஹ்மண்யேஸ்வர ஸ்வாமின : அகில சுபஸ்ய பாதாரவிந்தயோ : சோடஸநாம மந்த்ர புஷ்பார்ச்சனம் கரிஷ்யே.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

"வாழ்க பாம்பனார் மயிலவன் திருவடி நிழலில்"

உ

சிவமயம்

குமாரதாசன் என்னும் பெயரிய

அத்தியாச்சிரமி ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள்

## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

மீது இயற்றி அர்ச்சித்த

# சோடச நாமார்ச்சனை

ஓம் குமரகுரு தாச குருப்யோ நம:
சுபே சோபனே முகூர்த்தே அத்ய சர்வ சுபதினே அஸ்மத் குருமூர்த்தே: அபராருணகிரி பாம்பன் ஸ்வாமின: பாதார விந்தயோ: அஸ்மதா தீனாம் பக்த ஜனானாம் ஸர்வாபீஷ்ட ப்ரதாத்ருத்வ ஸித்தியர்த்தம் ஸோடச நாமார்ச்சனம் கரிஷ்யாம:

ஓம் மஹா தேஜோ மண்டலாசார்ய ஸ்ரீமத் பாம்பன் குமரகுரு தாஸ ஞான தேசிகாய நம:

ஓம் ஜடா மஸ்தக காஷாயாம்பர பஸ்ம ருத்ராக்ஷ தாரண திவ்ய மங்கள விக்ரஹாய நம:

ஓம் பாஹ்யாப் யந்தர விஷயாபிலாஷ சூன்யதன்ய புருஷாய நம:

ஓம் தமோ மண்டலாதி தூராய நம:

ஓம் ஹ்ருதயாம் போஜ மத்ய குஹ மந்திரா நுபவ ரஸிகாய நம:

ஓம் பிரணவ பரம்பராகதாய நம:

ஓம் தகராலய ரகஸ்ய சாஸ்த்ர ப்ரதர்ஸகாசார் யாய நம:

ஓம் திருப்பா பாஷ்ய கர்த்ரேண் நம:

ஓம் ஏக பத்ய பஞ்ச விம்ஸத்யுத்தர ஸதபங்க்யா ப்ரதர்ஸித அமானுஷ சக்தி விஸ்மித பண்டித வந்திதாய நம:

ஓம் ஷண்முக கவசாதிக்ரந்தப்ரவர்த்தகாய நம:

ஓம் ஷட்ஷஷ்டி, ஷட்ஸதோத்ர, ஷட்ஸஹஸ்ர பத்ய ப்ரதர்சித குமார பரமேஸ் வரைக ஸமர்ப்பித சித்தாய நம:

ஓம் பஹுமூர்த்தீனாம் பஹ்வீஸ்வர புத்யா வந்தன நிராகரண பூர்வக ஏகேஸ்வர குமாரகுரு வந்தனேன ஸர்வ தேவதா வந்தன ப்ரதர் ஸகாய நம:

ஓம் ஸ்வஸிஷ்யானாம் ஷடக்ஷர மந்த்ர தண்டத்யான கிரீட தானேனச முக்தி நகர ப்ரவேஸகாய நம:

ஓம் தன விருத்த, வயோ விருத்த, வித்யா விருத்த ஸேவித ஞான விருத்தாய நம:

ஓம் ஸ்வஸே வாகத ஸகலஜன துஃக நிவர்த்தகாய நம:

ஓம் ஸ்ரீசென்னபுரிதக்ஷிண வான்மீகி தபப்ரஸா தித ப்ரண வாகார மயூரபுர வாஸினே நம:

மஹாதே ஜோ மண்டல குரு அபராருண கிரிகுத்தா த்வைத வைதீக சைவசித்தாந்த ஞான பாநு ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாஸ முனீந்த்ர சரணார விந்தயோ: நாநாவித பரிமளமந்த்ர புஷ்பாணிம் ஸமர்ப்பயாமி.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

வாழ்க பாம்பனார் மயிலவன் திருவடி நிழலில்.

உ

முருகன் துணை

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த

# திருப்புகழ்

## விநாயகர் துதி

1

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்

மத்தமும் மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

2

உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி

இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே

தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே

அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமானே

3

பக்கரைவி சித்ரமணி பொற்கலனை யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்

திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்பிகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்

மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெ னக்கொளொரு
விக்கிநச மர்த்தனெனு மருளாழி
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமானே

## முதலாவது படைவீடாகிய
## திருப்பரங்குன்றம்

4

உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறா
உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன் மலைபோலே

கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
கதித்தடர்ந்தெறி கயிறடுகதைகொடு பொருபோதே
கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே

வினைத்த லந்தனி லலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெ யுகுதசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா
மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை யுடையோனே

தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தைநிந்தனைசெயுமுநிவரர்தொழ மகிழ்வோனே
தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

5

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ
தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே.

### இரண்டாவது படைவீடாகிய திருச்செந்தூர்

6

நிலையாப் பொருளை யுடலாக் கருதி
நெடுநாட் பொழுது மவமேபோய்

நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள் தடுமாறி

மலநீர்ச் சயன மிசையாப் பெருகி
மடிவேற் குரிய நெறியாக
மறைபோற் றரிய வொளியாய்ப் பரவு
மலர்தாட் கமல மருள்வாயே

கொலைகாட் டவுணர் கெடமாச் சலதி
குளமாய்ச் சுவற முதுசூதம்
குறிபோய்ப் பிளவு படமேற் கதுவு
கொதிவேற் படையை விடுவோனே

அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
அழியாப் புநித வடிவாகும்
அரனார்க் கதித பொருள்காட் டதிப
அடியார்க் கெளிய பெருமாளே.

7

வந்து வந்து முன்த வழ்ந்து
வெஞ்சு கந்த யங்க நின்று
மொஞ்சி மொஞ்சி யென்ற ழுங்கு ழந்தையோடு
மண்ட லங்கு லுங்க அண்டர்
விண்ட லம்பி ளந்தெ ழுந்த
செம்பொன் மண்ட பங்க ளும்ப யின்றவீடு

கொந்த ளைந்த குந்த ளந்த
ழைந்து குங்கு மந்த யங்கு
கொங்கை வஞ்சி தஞ்ச மென்று மங்குகாலம்
கொங்க டம்பு கொங்கு பொங்கு
பைங்க டம்பு தண்டை கொஞ்சு
செஞ்ச தங்கை தங்கு பங்க யங்கள்தாராய்

சந்த டர்ந்தெ ழுந்த ரும்பு
மந்த ரஞ்செ ழுங்க ரும்பு
கந்த ரம்பை செண்ப தங்கொள் செந்தில்வாழ்வே

தண்க டங்க டந்து சென்று
பண்க டங்க டர்ந்த இன்சொல்
திண்பு னம்பு குந்து கண்டி றைஞ்சுகோவே

அந்த கன்க லங்க வந்து
கந்த ரங்க லந்த சிந்து
ரஞ்சி றந்து வந்த லம்பு ரிந்தமார்பா
அம்பு னம்பு குந்த நண்பர்
சம்பு நன்பு ரந்த ரந்த
ரம்ப லும்பர் கும்பர் நம்பு தம்பிரானே

8

விந்ததி னூறி வந்தது காயம்
வெந்தது கோடி யினிமேலோ
விண்டுவி டாம லுன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும்

வந்துவி நாச முன்கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி
வன்பத மேறி யென்களை யாற
வந்தருள் பாத மலர்தாராய்

எந்தனு ளேக செஞ்சுட ராகி
யென்கணி லாடு தழல்வேணி
எந்தையர் தேடு மன்பர்ச காய
ரெங்கள்சு வாமி யருள்பாலா

சுந்தர ஞான மென்குற மாது
தன்றிரு மார்பி லணைவோனே
சுந்தர மான செந்திலில் மேவு
கந்தசு ரேசர் பெருமாளே.

9

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே

திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத்தோடு நடமாடுஞ்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே

அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே
அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான

சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தினகர் வாழு மாண்மைக் கார பெருமாளே.

10

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற

குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ

மறிமானு கந்த இறையோன்ம கிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவேலெ றிந்த அதிதீரா

அறிவால றிந்து னிருதாளி றைஞ்சு
மடியாரி டைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மேல மர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே.

## மூன்றாவது படைவீடாகிய திருவாவினன்குடி (பழநி)

11

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி
நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதேம நோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந நாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

## பழநி

12

திமிர வுததி யனைய நரக
செனன மதனில் விடுவாயேல்
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியு மணுகாதே

அமரர் வடிவு மதிக குலமு
மறிவு நிறையும் வரவேநின்
அருள தருளி யெனையு மனதொ
டடிமை கொளவும் வரவேணும்

சமர முகவெ லசுரர் தமது
தலைக ளுருள மிகவேநீள்
சலதி யலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே

வெமர வணையி லினிது துயிலும்
விழிகள் நளினன் மருகோனே
மிடறு கரியர் குமர பழநி
விரவு மமரர் பெருமாளே.

13

அவனிதனி லேபி றந்து மதலையென வேத வழ்ந்து
அழகுபெற வேந டந்து இளைஞோனாய்
அருமழலை யேமி குந்து குதலைமொழி யேபு கன்று
அதிவிதம தாய்வ ளர்ந்து பதினாறாய்

சிவகலைக ளாக மங்கள் மிகவுமறை யோது மன்பர்
திருவடிக ளேநி னைந்து துதியாமல்
தெரிவையர்க ளாசை மிஞ்சி வெகுகவலை யாயு ழன்று
திரியுமடி யேனை யுன்ற னடிசேராய்

மவுனவுப தேச சம்பு மதியறுகு வேணி தும்பை
மணிமுடியின் மீத ணிந்த மகதேவர்
மனமகிழ வேய ணைந்து ஒருபுறம தாக வந்த
மலைமகள்கு மார துங்க வடிவேலா

பவனிவர வேயு கந்து மயிலின்மிசை யேதி கழ்ந்து
படியதிர வேந டந்த கழல்வீரா
பரமபத மாய செந்தில் முருகனென வேயு கந்து
பழநிமலை மேல மர்ந்த பெருமாளே.

14

அருத்தி வாழ்வொடு தனகிய மனைவியு முறவோரும்
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்
தரித்த வூருமெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்ப ராவியும் வழிபடு தொழிலது தருவாயே

எருத்தி லேறிய இறையவர் செவிபுக வுபதேசம்
இசைத்த நாவின இதணுறு குறமக ளிருபாதம்
பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே.

15

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்

ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்றுமோதும்
ஏழைகள்வி யாகுலமி தேதெனவி னாவிலுனை
யேவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ

நீறுபடு மாழைபொரு மேனியவ வேலஅணி
நீமயில் வாகவுமை தந்தவேளே
நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா

சீறிவரு மாறவுண னாவியுண்ணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ்
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே.

16

ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணைரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே

பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னாசைப்பாடைத் தவிரேனோ

துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே
தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே

விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக்காரப் பெருமாளே.

17

ஒருவரை யொருவர் தேறி யறிகிலர் மதவி சாரர்
ஒருகுண வழியு றாத பொறியாளர்
உடலது சதமெ னாடி களவுபொய் கொலைக ளாடி
உறநம னரகில் வீழ்வ ரதுபோய்பின்

வருமொரு வடிவ மேவி யிருவினை கடலு ளாடி
மறைவரி னனைய கோல மதுவாக
மருவிய பரம ஞான சிவகதி பெறுக நீறு
வடிவுற அருளி பாத மருள்வாயே

திரிபுர மெரிய வேழ சிலைமத னெரிய மூரல்
திருவிழி யருள்மெய்ஞ் ஞான குருநாதன்
திருசரஸ் வதிம யேசு வரியிவர் தலைவ ரோத
திருநட மருளு நாத னருள்பாலா

சுரர்பதி யயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடுமெய்ஞ் ஞான அயிலோனே
சுககுற மகள்ம ணாள னெனமறை பலவு மோதி
தொழமுது பழநி மேவு பெருமாளே.

18

திடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான
செயலிலிமெய்த் தவமிலிநற் செபமிலிசொர்க் கமுமீதே

இடமிலிகைக் கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட
இருபதமுற் றிருவினையற் றியல்கதியைப் பெறவேணும்

கெடுமதியுற் றிடுமசுரக் கிளைமடியப் பொரும்வேலா
கிரணகுறைப் பிறையறுகக் கிதழ்மலர்கொக் கிறகோடே

படர்சடையிற் புனைநடனப் பரமர் தமக் கொருபாலா
பலவயலிற் றரளநிறைப் பழநிமலைப் பெருமாளே.

19

வரதா மணிநீ யெனவோரில்
வருகா தெதுதா னதில்வாரா
திரதா திகளால் நவலோக
மிடவே கரியா மிதிலேது
சரதா மறையோ தயன்மாலும்
சகலா கமநூ லறியாத
பரதே வதையாள் தருசேயே
பழனா புரிவாழ் பெருமாளே.

நான்காவது படைவீடாகிய திருவேரகம் (சுவாமிமலை)

20

அவாமரு வினாவசு தைகாணும டவாரெனு
மவார்கனலில் வாழ்வென் றுணராதே
அராநுக ரவாதையு றுதேரைக திநாடும
றிவாகியுள மால்கொண் டதனாலே

சிவாயமெ னுநாமமொ ருகாலுநி னையாததி
மிராகரனை வாவென் றருள்வாயே
திரோதம லமாறும டியார்கள ருமாதவர்
தியானமுறு பாதந் தருவாயே

உவாவினி யகானுவி னிலாவும யில்வாகன
முலாசமுட னேறுங் கழலோனே

உலாவுத யபாநுச தகோடியு ருவானவொ
ளிவாகுமயில் வேலங் கையிலோனே

துவாதச புயாசல ஷடாநந வராசிவ
சுதாஎயினர் மானன் புடையோனே
சுராதிப திமாலய னுமாலொடு சலாமிடு
சுவாமிமலை வாழும் பெருமாளே.

21

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா

காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுன திரு
காலில் வழிபட அருள்வாயே

ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவரு மிளையோனே

சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனி லுறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.

22

குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு மணியேயென்

றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதின முனையோதும்

அமலை அடியவர் கொடிய வினைகொடு
மபய மிடுகுர லறியாயோ

திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா

நமனை யுயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் குருநாதா
நளின குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே.

## ஸ்ரீசைலம்

### 23

ஒருபது மிருபது மறுபது முடனறு
முணர்வுற இருபத முளநாடி
உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு வொளிபெற விரவாதே

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே
திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறஅருள் புரிவாயே

பரிவுட னழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்
பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி யிளையோனே

பெருமலை யுருவிட அடியவ ருருகிட
பிணிகெட அருள்தரு குமரேசா
பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்
பிணையமர் திருமலை பெருமாளே.

## திருத்தணிகை

### 24

ஏது புத்திஜ யாஎ னக்கினி
யாரை நத்திடு வேன் வத்தினி
லேயி றத்தல்கொ லோஎ னக்குநி தந்தைதாயென்
றேயி ருக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவ
ரேச லிற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்

பாதம் வைத்திடை யாத ரித்தெனை
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
பார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனோடிப்
பால்மொ ழிக்குர லோல மிட்டிடில்
யாரெ டுப்பதெ னாவெ றுத்தழ
பார்வி டுப்பர்க ளோஎ னக்கிது சிந்தியாதோ

ஓத முற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
யோட வெட்டிய பாநு சத்திகை எங்கள்கோவே
ஓத மொய்ச்சடை யாட வுற்றமர்
மான்ம ழுக்கர மாட பொற்கழ
லோசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே

மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தும யூர அற்புத கந்தவேளே
மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ்தி ருத்தணி மாம லைப்பதி தம்பிரானே.

### 25

நிலையாத சமுத்திர மான
சமுசார துறைக்கணின் மூழ்கி
நிசமான தெனப்பல பேசி யதனூடே
நெடுநாளு முழைப்புள தாகி
பெரியோர்க ளிடைக்கர வாகி
நினைவால்நி னடித்தொழில் பேணி துதியாமல்

தலையான வுடற்பிணி யூறி
பவநோயி னலைப்பல வேகி
சலமான பயித்திய மாகி தடுமாறித்
தவியாமல் பிறப்பையு நாடி
யதுவேரை யறுத்துனை யோதி
தலமீதில் பிழைத்திட வேநி னருள்தாராய்

கலியாண சுபுத்திர னாக
குறமாது தனக்குவி நோத
கவினாரு புயத்திலு லாவி விளையாடிக்
களிகூரு முனைத்துணை தேடு
மடியேனை சுகப்பட வேவை
கடனாகு மிதுக்கன மாகு முருகோனே

பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே
பதியான திருத்தணி மேவு
சிவலோக மெனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத பெருமாளே.

26

இருமலு ரோக முயலகன் வாத
மெரிகுண நாசி விடமேநீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழுகள மாலை யிவையோடே

பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்
பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்க ளருள்வாயே

வருமொரு கோடி யசுரர்ப தாதி
மடியஅ நேக இசைபாடி
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே

தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.

27

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செகுத்தவ ருயிர்க்குஞ் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்

நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்

தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் தனபேரி
தடுட்டுடு டுடுட்டுண் ணெடத்துடி முழக்குந்
தளத்துட னடக்குங் கொடுசூரர்

சினத்தையு முடற்சங் கரித்தம லைமுற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண்
திருத்தணி யிருக்கும் பெருமாளே.

28

குடிவாழ்க்கை யன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்ப்ர சன்ன மொழியார்கள்
குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை யுணராதே

இடநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி
இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு
னிருதாட்கள் தம்மை யுணர்வேனோ

வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயில்மேற்றி கழ்ந்த குமரேசா
வடிவாட்டி வள்ளி அடிபோற்றி வள்ளி
மலைகாத்த நல்ல மணவாளா

அடிநாட்கள் செய்த பிழைநீக்கி யென்னை
யருள்போற்றும் வண்மை தரும்வாழ்வே
அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

## திருச்செங்கோடு

### 29

காலனிடத் தணுகாதே - காசினியிற் பிறவாதே
சீல அகத் தியஞான - தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே - மாதவரைப் பிரியானே
நாலுமறைப் பொருளானே - நாககிரிப் பெருமாளே.

## கொங்கணகிரி

### 30

ஐங்கரனை யொத்தமன மைம்புலம கற்றிவள
ரந்திபக லற்றநினை வருள்வாயே
அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை
அன்பொடுது திக்கமன மருள்வாயே

தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திரவெ ளிக்குவழி யருள்வாயே
தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்
சம்ப்ரமவி தத்துடனெ யருள்வாயே

மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமன
முன்றனைநி னைத்தமைய அருள்வாயே
மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரகைஷபுரி
வந்தனைய புத்தியினை யருள்வாயே

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே

குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கணகி ரிக்குள்வளர் பெருமாளே.

## குன்றுதோறாடல்

31

அதிருங் கழல்ப ணிந்து னடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலிருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கி லுமைபாலா
பதியெங் கிலுமி ருந்து விளையாடிப்
பலகுன் றிலும மர்ந்த பெருமாளே.

## ஆறாவது படைவீடாகிய பழமுதிர்சோலை

32

வாதினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயம தொழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து பணியேனே
ஆதியொடு மந்த மாகிய நலங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே

நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானில மலைந்து திரிவேனே
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனே

சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
சோகமது தந்து எனையாள்வாய்
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே.

33

காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே.

34

சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக என்று தெருவூடே

வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்
வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு மென்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே

சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழு மிஞ்சி
சேணிலவு தாவ செம்பொன் மணிமேடை
சேருமம ரேசா தங்க ளூரிதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா

ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி யீசர் தந்தை களிகூர
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே.

**காஞ்சீபுரம் (பிருதிவி)**

35

முட்டுப் பட்டுக் கதிதோறும்
முற்றச் சுற்றிப் பலநாளும்
தட்டுப் பட்டுச் சுழல்வேனைச்
சற்றுப் பற்றக் கருதாதோ

வட்டப் புட்பத் தலமீதே
வைக்கத் தக்கத் திருபாதா
கட்டத் தற்றத் தருள்வோனே
கச்சிச் சொக்கப் பெருமாளே.

36

அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி யறியாத
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்பு கழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடிச்

சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து
தெரிவைமார்க் குச்சொ ரிந்து அவமேயான்
திரியுமார்க் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோ க்ஷத்தை யென்று அருள்வாயே

இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம்வேற் றுப்பி ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தன்
இருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சோ லுடையோனே

குறவர்கூட் டத்தில் வந்து கிழவனாய்ப் புக்கு நின்று
குருவியோட் டித்தி ரிந்த தவமானைக்
குணமதாக் கிச்சி றந்த வடிவுகாட் டிப்பு ணர்ந்த
குமரகோட் டத்த மர்ந்த பெருமாளே.

## 2. திருவானைக்கா (அப்பு)

37

நாடித் தேடித் தொழுவார்பால்
நானத் தாகத் திரிவேனோ
மாடக் கூடற் பதிஞான
வாழ்வைச் சேரத் தருவாயே
பாடற் காதற் புரிவோனே
பாலைத் தேனொத் தருள்வோனே
ஆடற் றோகைக் கினியோனே
ஆனைக் காவிற் பெருமாளே.

## திருவண்ணாமலை (தேயு)

38

இரவுபகற் பலகாலும் - இயலிசைமுத்தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத் - திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே - பரசிவதத் துவஞானா
அரனருள்சற் புதல்வோனே - அருணகிரிப் பெருமாளே.

## திருக்காளத்தி (வாயு)

39

சிரத்தா னத்திற் பணியாதே
செகத்தோர் பற்றைக் குறியாதே
வருத்தா மற்றொப் பிலதான
மலர்த்தாள் வைத்தெந் தனையாள்வாய்
நிருத்தா கர்த்தத் துவநேசா
நினைத்தார் சித்தத் துறைவோனே
திருத்தாள் முத்தர்க் கருள்வோனே
திருக்கா ளத்திப் பெருமாளே.

## 5. *சிதம்பரம் (ஆகாயம்)*

40

எழுகடல் மணலை அளவிடி னதிக
மெனதிடர் பிறவி அவதாரம்
இனியுன தபய மென துயி ருடலு
மினியுடல் விடுக முடியாது

கழுகொடு நரியு மெரிபுவி மறலி
கமலனு மிகவு மயர்வானார்
கடனுன தபய மடிமையு னடிமை
கடுகியு னடிகள் தருவாயே

விழுதிக ழழகி மரகத வடிவி
விமலிமு னருளு முருகோனே
விரிதல மெரிய குலகிரி நெரிய
விசைபெறு மயிலில் வருவோனே

எழுகடல் குமுற அவுணர்க ளுயிரை
யிரைகொளும் அயிலை யுடையோனே
இமையவர் முனிவர் பரவிய புலியு
ரினில்நட மருவு பெருமானே.

### சிதம்பரம்

41

அவகுண விரகனை வேதாள ரூபனை
அசடனை மசடனை ஆசார ஈனனை
அகதியை மறவனை ஆதாளி வாயனை அஞ்சுபூதம்
அடைசிய சவடனை மோடாதி மோடனை
அழிகரு வழிவரு வீணாதி வீணனை
அழுகலை யவிசலை ஆறான வூணனை அன்பிலாத
கவடனை விகடனை நானாவி காரனை
வெகுளியை வெகுவித மூதேவி மூடிய
கலியனை அலியனை ஆதேச வாழ்வனை வெம்பிவீழுங்
களியனை யறிவுரை பேணாத மாநுட
கசனியை யசனியை மாபாத னாகிய
கதியிலி தனையடி நாயேனை யாளுவ தெந்தநாளோ

மவுலியி லழகிய பாதாள லோகனு
மரகத முழுகிய காகோத ராஜனு
மநுநெறி யுடன்வளர் சோணாடர் கோனுட னும்பர்சேரும்

மகபதி புகழ்புலி யூர்வாழு நாயகர்
மடமயில் மகிழ்வுற வானாடர் கோவென
மலைமக ளுமைதரு வாழ்வேம னோகர மன்றுளாடும்

சிவசிவ ஹரஹர தேவா நமோநம
தெரிசன பரகதி யானாய் நமோநம
திசையினு மிசையினும் வாழ்வே நமோநம
செஞ்சொல்சேருந்

திருதரு கலவிம ணாளா நமோநம
திரிபுர மெரிசெய்த கோவே நமோநம
ஜெயஜெய ஹரஹர தேவா சுராதிபர் தம்பிரானே.

## திருப்போரூர்

### 42

உருக்கார் வாளி கண்கள் பொருப்பார் வார்த னங்கள்
உகப்பார் வால சந்த்ர னுதனூலாம்
உருச்சேர் நீண்ம ருங்குல் பணைத்தோளோதி கொண்ட
லுவப்பா மேல்வி ழுந்து திரிவோர்கள்

அருக்கா மாதர் தங்கள் வரைக்கே யோடி யின்ப
வலைக்கே பூணு நெஞ்ச னதிபாவி
அசட்டால் மூடு கின்ற மசக்கால் மாயு மிந்த
அவத்தா லீன மின்றி யருள்வாயே.

எருக்கார் தாளி தும்பை மருச்சேர் போது கங்கை
யினைச்சூ டாதி நம்பர் புதல்வோனே
இருக்கா லேநி னைந்து துதிப்பார் நாவி னெஞ்சி
லிருப்பா யானை தங்கு மணிமார்பா

செருக்கா லேமி குந்த கடற்சூர் மாள வென்ற
திறற்சேர் வேல்கை கொண்ட முருகோனே
தினைக்கோர் காவல் கொண்ட குறத்தேன் மாது பங்க
திருப்போ ரூர மர்ந்த பெருமாளே.

### 43

சீரு லாவிய வோதிம மான மாநடை மாமயில்
சேய சாயல்க லாமதி முகமானார்
தேனு லாவிய மாமொழி மேரு நேரிள மாமுலை
சேலு லாவிய கூர்விழி குமிழ்நாசி

தாரு லாவிய நீள்குழல் வேய ளாவிய தோளியர்
சார்பி லேதிரி வேனைநி னருளாலே
சாம வேதியர் வானவ ரோதி நாண்மலர் தூவிய
தாளில் வீழவி னாமிக அருள்வாயே

காரு லாவிய நீள்புன வேடர் மால்வரை மீதுறை
காவல் மாதிநொ டாவல்செய் தணைவோனே
காண ஆகம வேதபு ராண நூல்பல வோதிய
கார ணாகரு ணாகர முருகோனே

போரு லாவிய சூரனை வாரி சேறெழ வேல்விடு
பூப சேவக மாமயில் மிசையோனே
போதன் மாதவன் மாதுமை பாதி யாதியு மேதொழு
போரி மாநகர் மேவிய பெருமாளே.

## திருவீழிமிழலை

44

எருவாய் கருவாய் தனிலே யுருவா
யிதுவே பயிராய் விளைவாகி
இவர்போ யவரா யவர்போ யிவரா
யிதுவே தொடர்பாய் வெறிபோல

ஒருதா யிருதாய் பலகோ டியதா
யுடனே யவமா யழியாதே
ஒருகால் முருகா பரமா குமரா
உயிர்கா வெனவோ தருள்தாராய்

முருகா வெனவோர் தரமோ தடியார்
முடிமே லிணைதா ளருள்வோனே
முனிவோ ரமரோர் முறையோ வெனவே
முதுசூ ருரமேல் விடும்வேலா

திருமால் பிரமா வறியா தவர்சீர்
சிறுவா திருமால் மருகோனே
செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ்
திருவீ ழியில்வாழ் பெருமாளே.

## வயலூர்

45

என்னால் பிறக்கவும் என்னா லிறக்கவும்
என்னால் துதிக்கவும் கண்களாலே
என்னா லழைக்கவும் என்னால் நடக்கவும்
என்னா லிருக்கவும் பெண்டிர்வீடு

என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்
என்னால் சலிக்கவும் தொந்தநோயை
என்னா லெரிக்கவும் என்னால் நினைக்கவும்
என்னால் தரிக்கவும் இங்குநானார்

கன்னா ருரித்தஎன் மன்னா எனக்குநல்
கர்ணா மிர்தப்பதம் தந்தகோவே
கல்லார் மனத்துட னில்லா மனத்தவ
கண்ணா டியிற்றடம் கண்டவேலா

மன்னா னதக்கனை முன்னாள் முடித்தலை
வன்வா ளியிற்கொளும் தங்கரூபன்
மன்னா குறத்தியின் மன்னா வயற்பதி
மன்னா முவர்க்கொரு தம்பிரானே.

## கருவூர்

### 46

மதியால்வித் தகனாகி-மனதாலுத் தமனாகிப்
பதிவாகிச் சிவஞான-பரயோகத் தருள்வாயே
நிதியேநித் தியமேயென்-நினைவேநற் பொருளாயோய்
கதியேசொற் பரவேளே-கருவூரிற் பெருமாளே.

## பொது

### 47

கருப்பற் றூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே
பரப்பற் றாருக் குரியோனே
பரத்தப் பாலுக் கணியோனே
திருக்கைச் சேவற் கொடியோனே
செகத்திற் சோதிப் பெருமாளே.

### 48

பரவைக் கெத்தனை விசைதூது
பகரற் குற்றவ ரெனமாணுன்
மரபுக் குச்சித ப்ரபுவாக
வரமெத் தத்தர வருவாயே
கரடக் கற்பக னிளையோனே
கலைவிற் கட்குற மகள்கேள்வா
அரனுக் குற்றது புகல்வோனே
அயனைக் குட்டிய பெருமாளே.

49

அதல சேட னாராட அகில மேரு மீதாட
அபின காளி தானாட அவளோடன்
றதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
அருகு பூத வேதாள மவையாட

மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
மருவு வானு ளோராட மதியாட
வனச மாமி யாராட நெடிய மாம னாராட
மயிலு மாடி நீயாடி வரவேணும்

கதைவி டாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால் நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்
கதறு காலி போய்மீள விஜய னேறு தேர்மீது
கனக வேத கோடூதி அலைமோதும்

உததி மீதி லேசாயு முலக மூடு சீர்பாத
உவண மூர்த்தி மாமாயன் மருகோனே
உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜ
னுளமு மாட வாழ்தேவர் பெருமாளே.

## வேல்வகுப்பு

பருத்தமுலை சிறுத்தவிடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்

பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்

பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவ னிசைக்குருகி வரைக்குகையை
யிடித்துவழி காணும்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுத
லொழித்தவுண ருரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கவரு ணேரும்;

சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்குமரி தனக்குநரர் தமக்குமுறு
மிடுக்கண்வினை சாடும்

சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி
யொளிப்பஅலை யடக்குதழ லொளிப்பவொளி
ரொளிப்பிரபை வீசும்

துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கவிடர்
நினைக்கினவர் குலத்தைமுத லறக்களையு
மெனக்கொர்துணை யாகும்

சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை
யடுத்தபகை யறுத்தெறிய வுறுக்கியெழு
மறத்தைநிலை காணும்;

தருக்கிநமன் முருக்கவரி னெருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தவிறை
கழற்குநிக ராகும்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்

தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்

சலத்துவரு மரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்;

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையு முடைப்படைய வடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்

திசைக்கிரியை முதற்குலிச னறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்

சினத்தவுண ரெதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்

திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயி
னடத்துகுகன் வேலே.

உ
முருகா

ஸ்ரீஅருணகிரிநாத சுவாமிகள்
அருளிச் செய்த

## கந்தரந்தாதி

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்த செந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவென்னிற்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே. 48

உ
முருகா

## கந்தரலங்காரம்

நூல்

பேற்றைத் தவஞ் சற்றுமில்லாத வென்னைப்ர பஞ்ச மென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட வா! செஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன் க்ருபாகரனே. 1

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.
38

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே. 40

சிந்திக் கிலேனின்று சேவிக்கி லேன்றண்டைச் சிற்றடியை
வந்திக் கிலேனொன்றும் வாழ்த்துகி லேன்மயில் வாகனனைச்
சந்திக் கிலேன்பொய்யை நிந்திக்கி லேனுண்மை சாதிக் கிலேன்
புந்திக் கிலேசமுங் காயக் கிலேசமும் போக்குதற்கே. 60

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ் செங்கோடன் மயூரமுமே. 70

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே. 72

படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மாநந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே. 75

மைவருங் கண்டத்தர் மைந்தகந்தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறியேன் கற்ற கல்வியும் போய்ப்
பைவருங் கேளும் பதியுங் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் னடைக்கலமே. 84

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே. 90

உ

சிவமயம்

# கந்தரநுபூதி

## நூல்

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியானை சகோதரனே. 1

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகாசல வேலவ நாலுகவித்
தியாகா சுரலோக சிகாமணியே. 11

முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங்கவ எண்குண பஞ்சரனே. 15

யாமோதிய கல்வியு மெம்மறிவுந்
தாமேபெற வேலவர் தந்ததனாற்
பூமேல் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீ ரினியே. 17

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா-அநுபூதி பிறந்ததுவே. 43

எந்தாயுமெனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே 46

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே. 51

உ
சிவமயம்

## ஸ்ரீஅருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த
# திருஎழு கூற்றிருக்கை

### துதி

ஒருரு வாகிய தாரகப் பிரமத்
தொருவகைத் தோற்றத் திருமர பெய்தி
ஒன்றா யொன்றி யிருவரிற் றோன்றி மூவா தாயினை;
இருபிறப் பாளரி னொருவ னாயினை;
ஓராச் செய்கையி னிருமையின் முன்னாள்
நான்முகன் குடுமி ஒரு நொடி பெயர்த்து
மூவரும் போந்து இருதாள் வேண்ட ஒரு சிறை விட்டனை;
ஒரு நொடி யதனில் இருசிறை மயிலின்
முந்நீர் உடுத்த நானிலம் அஞ்ச நீவலஞ் செய்தனை;
நால்வகை மருப்பின் மும்மதத் திருசெவி
ஒருகைப் பொருப்பன் மகளை வேட்டனை;
ஒருவகை வடிவினில் இருவகைத் தாகி
மும்மதன் தனக்கு மூத்தோன் ஆயினை;
நால்வாய் முகத்தோன் ஐந்துகைக் கடவுள்
அறுகு சூடிக் கிளையோன் ஆயினை;
ஐந்தெழுத் ததனில் நான்மறை உணர்ந்த
முக்கட் சுடரினை இருவினை மருந்துக்
கொருகுரு வாயினை;
ஒருநாள் உமைஇரு முலைப்பால் அருந்தி
முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்
ஐம்புலக் கிழவன் அறுமுகன் இவன் என
எழில்தரும் அழகுடன் கழுமலத் துதித்தனை;

அறுமீன் பயந்தனை; ஐந்தரு வேந்தன்
நான்மறைத்தோற்றத்து முத்தலைச்செஞ்சூட்டு
அன்றில் அங்கிரி இருபிளவாக ஒருவேல் விடுத்தனை;
காவிரி வடகரை மேவிய குருகிரி இருந்த
ஆறெழுத் தந்தணர் அடியிணை போற்ற
ஏரகத் திறைவன் எனஇருந் தனையே.

(இத்துதியைப் பாராயணம் செய்வதால்
அருணகிரிநாத சுவாமிகள் வாக்கு முழுவதும்
பாராயணம் செய்த பலன் கிட்டும் என்பர்).

ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகள் திருவடி வாழ்க
வாழ்க! வாழ்க! நீடுவாழ்க!

உ

சிவமயம்

குஹப்ரஹ்மணேநம:

திருச்சிற்றம்பலம்

**முதன் மண்டலமாகிய**

**குமரகுருதாச சுவாமிகள்**

**பாடல்**

## 1. தெய்வ வணக்கம்

அறிவினுக் கறிவான பொருளையடி கட்கருளு
மானந்த போதநிதியை
அத்துவித நிச்சய வகண்டவே காகார
மானசின் மயவாரியைக்
குறிதிரி பிலாதசிவ யோகபரி பூரணக்
கூர்ப்பினைக் குருபரத்தைக்
குழவுமுது கிழமையின் றிலககோ சரசிற்சு
கோதய விலாசவெளியைத்
துறவரிரு தயநடையை யம்பரம தேசெனச்
சுடருமா னந்தவடிவைச்
சுத்தபர தத்துவச் சுடரைச் சுயம்புவைத்
துரியவோங் காரமுதலை
நிறைசரத நிட்கள நிராகநிரு நாமபர
நிட்டையி னிலாவுதிருவை
நித்திய சுவானுபவ முற்றவயி லடிகளை
நிரந்தரமு ணெஞ்சில்வைப்பாம். 1

நின்மல நிராமய புராணபர தாரசு
நிரம்பர நிராகாரமாய்
நிர்க்குண நிராகுல நிராசன நிராசூச
நிட்பிரபஞ் சப்பிரமமாய்ச்
சன்மமிகை மரணமின் றண்டபிண்டப் பெயர்கொள்
சங்கங்க ளிற்கலாவிச்
சச்சிதா னந்தசிவ சிற்ககன மாய்நித்த
சருவவல் லபமுள்ளதாய்த்

தன்மகிரு பாகர விலாசசுக சாகர
சதாசிவ மகேசவடிவாய்ச்
சதுர்மறைசொல் வேதாந்த சித்தாந்த நிலையிலெழு
சமரச சுபாவமுடிபாய்
நன்மவுன ரறிவின் மெய் யறிவாகி விரிவாகி
நாளுஞ் சிறந்துதிகழும்
ஞாட்பா றெழுத்திறைக் கடிமையென விதயமுண்
ணண்ணியஞ் சலிசெய்குவாம். 2

தொல்லையில் வாதவூ ரடிகளொரு பெயர்புரஞ்
சொல்லவொண் ணாமுதலெனச்
சொற்றபர மாய்மும் மறைக்கிதய மாயுள்ள
தூவரிக ளுக்குரிமையாய்
ஒல்லைமறை யின்பனுவல் பன்னுமா றாதார
வுடலையும் பிராணனென்றே
ஓதாவி தன்னையும் பொலமெனும் பொருளையு
மொருங்கே கவர்ந்தொன்றைநல்
கெல்லையொன் றில்பரம பதியாகி யதர்வத்தி
லெசுரிலெழு பஞ்சருத்ரம்
என்றதிவ் யோபநிட தங்களறை கின்றசிவ
மென்னவெவ ருந்தொழவளர்
தில்லையம் பொதிநடக் களைகணா யாறென்று
செப்புபொறி கட்கணங்காய்த்
தேகிக ளுளக்குகை தொறுமுள்ள தாயுள்ள
தெய்வமணி யைப்பணிகுவாம். 3

உ
சிவமயம்

## பகைகடிதல்

தனதன தனதனனா, தனதன தனதனனா

திருவளர் சுடருருவே சிவைகர மமருருவே
அருமறை புகழுருவே யறவர்க டொழுமுருவே
இருடபு மொளியுருவே யெனநினை யெனதெதிரே
குருகுகண் முதன்மயிலே கொணர்தியு னிறைவனையே. 1

மறைபுக ழிறைமுனரே மறைமுதல் பகருருவே
பொறைமலி யுலருருவே புனநடை தருமுருவே
இறையிள முகவுருவே யெனநினை யெனதெதிரே
குறைவறு திருமயிலே கொணர்தியு னிறைவனையே. 2

இதரர்கள் பலர்பொரவே யிவணுறை யெனதெதிரே
மதிரவி பலவெனதேர் வளர்சர ணிடையெனமா
சதுரொடு வருமயிலே தடவரை யசைவுறவே
குதிதரு மொருமயிலே கொணர்தியு னிறைவனையே 3

பவநடை மனுடர்முனே படருறு மெனதெதிரே
நவமணி நுதலணியேர் நகைபல மிடறணிமால்
சிவணிய திருமயிலே திடனொடு நொடிவலமே
குவலயம் வருமயிலே கொணர்தியு னிறைவனையே 4

அழகுறு மலர்முகனே யமரர்கள் பணிகுகனே
மழவுரு வுடையவனே மதிநனி பெரியவனே
இழவில ரிறையவனே யெனநினை யெனதெதிரே
குழகது மிளிர்மயிலே கொணர்தியு னிறைவனையே 5

இணையறு மறுமுகனே யிதசசி மருமகனே
இணரணி புரள்புயனே யெனநினை யெனதெதிரே
கணபண வரவுரமே கலைவுற வெழுதருமோர்
குணமுறு மணிமயிலே கொணர்தியு னிறைவனையே 6

எளியவெ னிறைவகுகா வெனநினை யெனதெதிரே
வெளிநிகழ் திரள்களை மீன் மிளிர்சினை யெனமிடைவான்
பளபள வெனமினுமா பலசிறை விரிதருநீள்
குளிர்மணி விழிமயிலே கொணர்தியு னிறைவனையே 7

இலகயின் மயின்முருகா வெனநினை யெனதெதிரே
பலபல களமணியே பலபல் பதமணியே
கலகல கலவெனமா கவினொடு வருமயிலே
குலவிடு சிகைமயிலே கொணர்தியு னிறைவனையே 8

இகலறு சிவகுமரா வெனநினை யெனதெதிரே
சுகமுனி வரரெழிலார் சுரர்பலர் புகழ்செயவே
தொகுதொகு தொகுவெனவே சுரநட மிடுமயிலே
குகபதி யமர்மயிலே கொணர்தியு னிறைவனையே 9

கருணைபெய் கனமுகிலே கடமுனி பணிமுதலே
அருணைய னரனெனவே யகநினை யெனதெதிரே
மருமல ரணிபலவே மருவிடு களமயிலே
குருபல வவிர்மயிலே கொணர்தியு னிறைவனையே 10

இத் திருப்பத்தைக் காலை மாலை பூசித்துப் பத்திபிறங்கப் பாடுவோர், திருமயின் மீது செவ்வேட்பரமனைத் தரிசிப்பர்; பகையை வெல்வர். சண்முககவச பாராயணத்திற்கு இது வேறாம்.

--ஸ்ரீமத் பாமபன் சுவாமிகள்

உ
சிவமயம்
ஓம் குமாரகுருப்யோ நம:
திருச்சிற்றம்பலம்

# சண்முக கவசம்

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்*

அண்டமா யவனி யாகி யறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வ மாகி
எண்டிசை போற்ற நின்ற வென்னரு ளீச னான
திண்டிறற் சரவ ணத்தான் றினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாங் கயிலைச் செல்வ னணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் றானிரு நுதலைக் காக்க
சோதியாந் தணிகை யீசன் றுரிசிலா விழியைக் காக்க
நாதனாங் கார்த்தி கேய னாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையுஞ் செவ்வே ளியல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பன் முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க. 3

ஈசனாம் வாகு லேய னெனதுகந் தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவுந் திருமகண் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீரா றாயுதன் காக்க வென்றன்
ஏசிலா முழங்கை தன்னை யெழிற்குறிஞ் சிக்கோன் காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை யுமையிள மதலை காக்க
தறுகணே றிடவே யென்கைத் தலத்தைமா முருகன் காக்க
புறங்கையை யயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமான் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க. 5

ஊணிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோணிமிர் சுரேச னுந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை யங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க வறுமுகன் குதத்தைக் காக்க. 6

எஞ்சிடா திடுப்பை வேலுக் கிறைவனார் காக்க காக்க
அஞ்சக னமொரி ரண்டு மரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருட்காங் கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சர ணேச வாசான் றிமிருமுன் றொடையைக் காக்க. 7

ஏரகத் தேவ னென்றா ளிருமுழங் காலுங் காக்க
சீருடைக் கணைக்கா றன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடி ரண்டு நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கா றன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத் தமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரனகங் காலைக் காக்க
மெய்யுடன் முழுது மாதி விமலசண் முகவன் காக்க
தெய்வநா யகவி சாகன் றினமுமென் னெஞ்சைக் காக்க. 9

ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்
பலிகொளி ராக்க தப்பேய் பலகணத் தெவையா னாலுங்
கிலிகொள வெனைவேல் காக்க கெடுபரர் செய்யுஞ் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா தயில்வேல் காக்க. 10

ஓங்கிய சீற்ற மேகொண் டுவணிவில் வேல்சூ லங்கள்
தாங்கிய தண்ட மெஃகந் தடிபர சீட்டி யாதி
பாங்குடை யாயு தங்கள் பகைவரென் மேலே யோச்சின்
தீங்குசெய் யாம லென்னைத் திருக்கைவேல் காக்க காக்க. 11

ஔவிய முளரு னுண்போ ரசடர்பே யரக்கர் புல்லர்
தெவ்வர்க ளெவரா னாலுந் திடமுட னெனைமற் கட்டத்
தவ்வியே வருவா ராயிற் சராசர மெலாம்பு ரக்குங்
கவ்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கங் கரடிநாய் புலிமா யானை
கொடியகோ ணாய்கு ரங்கு கோலமார்ச் சாலஞ் சம்பு
நடையுடை யெதனா லேனு நானிடர்ப் பட்டி டாமற்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க. 13

ஙகரமே போற்ற ஸ்ரீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதே ணண்டுக் காலி செய்யனே றாலப் பல்லி
நகமுடை யோந்தி பூரா னளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையா லெற்கோ ரூறிலா தைவேல் காக்க. 14

சலத்திலுய் வன்மீ னேறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலுஞ் சலத்தி லுந்தா னெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினா னான்வ ருத்தங் கொண்டிடா தவ்வவ் வேளை
பலத்துட னிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவே னவக்கிர கக்கோள் காக்க.
சுமவிழி நோய்கள் தந்த சூலையாக் கிராண ரோகம்
திமிர்கழல் வாதஞ் சோகை சிரமடி கர்ண ரோகம்
எமையணு காம லேபன் னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத் தடிபோ னைக்குந் தலையிடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மங் குடல்வலி யீழை காசம்
நிமிரொணா திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேக மெல்லாம்
எமையடை யாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கமில் லாத பித்த வெரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்ட மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லுஞ் சன்னி சாலமென் றறையு மிந்தப்
பிணிக்குல மெனையா ளாமற் பெருஞ்சத்தி வடிவேல் காக்க.18

தவனமா ரோகம் வாதஞ் சயித்திய மரோச கம்மெய்
சுவறவே செய்யு மூலச் சூடிளைப் புடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோ யண்டவா தங்கள் சூலை
எவையுமென் னிடத்தெய் தாம லெம்பிரான் றிணிவேல் காக்க.
19

நமைப்புறு கிரந்தி வீக்க நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை யாகுபஃ றொழுநோய் கக்கல்
இமைக்குமுன் னுறுவ லிப்போ டெழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழு தேனு மென்னை யெய்தாம லருள்வேல் காக்க.
20

பல்லது கடித்து மீசை படபடென் றேது டிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினுங் கரிய மேனி யெமபடர் வரினு மென்னை
ஒல்லையிற் றார காரி ஓம்ஐம் ரீம்வேல் காக்க. .21

மண்ணிலு மரத்தின் மீது மலையிலு நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதுஞ் சாரிசெய் யூர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த விடத்து மென்னை
நண்ணிவந் தருளார் சஷ்டி நாதன்வேல் காக்க காக்க. 22

யகரமே போற்சூ லேந்து நறும்புயன் வேன்முன் காக்க
அகரமே முதலா மீரா றம்பகன் வேல்பின் காக்க
சகரமோ டாறு மானோன் றன்கைவே னடுவிற் காக்க
சிகரமின் றேவ மோலி திகழைவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல்கி ழக்கிற் றிறமுடன் காக்க வங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோ னிகலுடைக் கரவேல் காக்க. 24

லகரமே போற்கா ளிங்க னல்லுட னெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கி னிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயு வினிற்குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னி லீசன் மகனருட் டிருவேல் காக்க
விடையுடை யீசன் றிக்கில் வேதபோ தகன்வேல் காக்க
நடக்கையி லிருக்கு ஞான்று நவில்கையி னிமிர்கை யிற்கீழ்க்
கிடக்கையிற் றூங்கு ஞான்று கிரிதுளைத் துளவேல் காக்க.
26

இழந்துபோ காத வாழ்வை யீயுமுத் தையனார் கைவேல்
வழங்குநல் லூணுண் போது மால்விளை யாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்துநெஞ் சடக்கும் போதும்
செழுங்குணத் தோடே காக்க திடமுடன் மயிலுங் காக்க. 27

இளமையில் வாலி பத்தி லேறிடு வயோதி கத்தில்
வளரறு முகச்சி வன்றான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்னெ லோஞ்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கற்கால் சிவகுரு நாதன் காக்க. 28

இறகுடைக் கோழித் தோகைக் கிறைமுனி ராவிற் காக்க
திறலுடைச் சூர்ப்ப கைத்தே திகழ்பினி ராவிற் காக்க
நறவுசேர் தாட்சி லம்ப னடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழக னெங்கோன் மாறாது காக்க காக்க. 29

இனமெனத் தொண்ட ரோடு மிணக்கிடுஞ் செட்டி காக்க
தனிமையிற் கூட்டந் தன்னிற் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க வித்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க வந்தே. 30

# பரிபூஜன
# பஞ்சாமிர்த வண்ணம்

## 1. பால்

தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா

தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா

தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா
தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா - தனதனதனதானா.

இலங்கு நன்கலை விரிஞ்சனோ
டனந்த னுஞ்சத மகன்சதா
வியன்கொ டம்பியர் களும்பொனா
டுறைந்த புங்கவர் களுங்கெடா

தென்றுங் கொன்றைய ணிந்தோனார்
தந்தண் டின்றிர ளுஞ்சேயா
மென்றன் சொந்தமி னுந்திதே
தென்றங் கங்கணி கண்டோயோ

தேந்து வன்படைவேல் வலி சேர்ந்த திண்புயமே
யேய்ந்த கண்டகர்கா றொடை மூஞ்சி கந்தரமோ

டெலும்பு றுந்தலை களுந்து ணிந்திட
வடர்ந்த சண்டைக டொடர்ந்துபே

யெனுங்கு ஞுங்குக ணிணங்க ளுண்டரன்
மகன்பு றஞ்சய மெனுஞ்சொலே
- களமிசையெழுமாறே, (1/4)

துலங்கு மஞ்சிறை யலங்கவே
விளங்க வந்தவொர் சிகண்டியே
துணிந்தி ருந்துயர் கரங்கண்மா
வரங்கண் மிஞ்சிய விரும்புகூர்

துன்றுந் தண்டமொ டம்பீர்வாள்
கொண்டண் டங்களி னின்றாடே
சுண்டும் புங்கம ழிந்தேலா
தஞ்சும் பண்டசுரன் சூதே

சூழ்ந்தெ ழும்பொழுதே கரம் வாங்கி யொண்டிணிவே
றூண்டி நின்றவனே கிளை யோங்க நின்றுளமா

துவந்து வம்பட வகிர்ந்து வென்றதி
பலம் பொருந்திய நிரஞ்சனா
சுகங்கொ ளுந்தவர் வணங்கு மிங்கித
முகந்த சுந்தர வலங்க்ருதா
- அரிபிரமருமேயோ, (1/2)

அலைந்து சந்தத மறிந்திடா
தெழுந்த செந்தழ லுடம்பினா
ரடங்கி யங்கமு மிறைஞ்சியே
புகழ்ந்த வன்றுமெய் மொழிந்தவா

அங்கிங் கென்பத றுந்தேவா
யெங்குந் துன்றிநி றைந்தோனே
யண்டுந் தொண்டர்வ ருந்தாமே
யின்பந் தந்தரு ளுந்தாளா

ஆம்பி தந்திடுமா மணி பூண்ட வந்தளையா
வாண்ட வன்குமரா வெனை யாண்ட செஞ்சரணா

அலர்ந்த விந்துள வலங்க லுங்கடி
செறிந்த சந்தன சுகந்தமே

யணிந்து குன்றவர் நலம் பொருந்திட
வளர்ந்த பந்தனை யெனும் பெணாள்
- தனையணைமணவாளா, (3/4)

குலுங்கி ரண்டுமு கையுங்களா
ரிருண்ட கொந்தள வொழுங்கும்வேல்
குரங்கு மம்பக மதுஞ்செவா
யதுஞ்ச மைந்துள மடந்தைமார்

கொஞ்சும் புன்றொழி லுங்காலோ
ருஞ்சண் டன்செய லுஞ்சூடெ
கொண்டங் கம்பட ருஞ்சீழ்நோ
யண்டந் தந்தம்வி ழும்பாழ்நோய்

கூன்செ யும்பிணிகால் கரம் வீங்க முங்கலும்வாய்
கூம்ப ணங்குகணோய் துயர் சார்ந்த புன்கணுமே

குயின்கொ ளுங்கடல் வளைந்த விங்கெனை
யடைந்தி டும்படி யினுஞ்செயேல்
குவிந்து நெஞ்சமு ளணைந்து நின்பத
நினைந்து யும்படி மனஞ்செயே
- திருவருண்முருகோனே. (1)

2. தயிர்

தனத்தன தந்தன தனத்தன தந்தன
தனத்தன தந்தன தனத்தன தந்தன
தா தனனா தனனா தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்த தந்தன
தாதனனா தனனா தனனா - தனதனதனதானா.

கடித்துண ரொன்றிய முகிற்குழ லுங்குளிர்
கலைப்பிறை யென்றிடு நுதற்றில கந்திகழ்
கா சுமையா ளிளமா மகனே

களங்க விந்துவை முனிந்து நன்கது
கடந்து விஞ்சிய முகஞ்சி றந்தொளி

கா லயிலார் விழிமா மருகா
- விரைசெறியணிமார்பா, (1/8)

கனத்துயர் குன்றையு மிணைந்துள கும்பக
லசத்தையும் விஞ்சிய தனத்திசை மங்கைகொள்
கா தலனான் முகனா டமுதே

கமழ்ந்த குங்கும நரந்த முந்திமிர்
கரும்பெ னுஞ்சொலை யியம்பு குஞ்சரி
கா வலனே குகனே பரனே
- அமரர்கடொழுபாதா, (1/4)

உடுக்கிடை யின்பணி யடுக்குடை யுங்கன
யுரைப்புயர் மஞ்சுறு பதக்கமொ டம்பத
வோ வியநூ புரமோ திரமே

ருயர்ந்த தண்டொடை களுங்க ரங்களி
லுறும்ப சுந்தொடி களுங்கு யங்களி
லூ ரெழில்வா ரொடுநா சியிலே
- மினுமணிநகையோடே, (3/8)

உலப்பறி லம்பக மினுக்கிய செந்திரு
வுருப்பணி யும்பல தரித்தடர் பைந்தினை
யோ வலிலா வரணே செயுமா

றொழுங்கு றும்புன மிருந்து மஞ்சுல
முறைந்த கிஞ்சுக நறுஞ்சொ லென்றிட
வோ லமதே யிடுகா னவர்மா
- மகளெனுமொருமானாம், (1/2)

மடக்கொடி முன்றலை விருப்புடன் வந்ததி
வனத்துறை குன்றவ ருறுப்பொடு நின்றிள
மானினியே கனியே யினிநீ

வருந்து மென்றனை யணைந்து சந்தத
மனங்கு ளிர்ந்திட விணங்கி வந்தரு
ளாய் மயிலே குயிலே யெழிலே
- மடவனநினதேரார், (5/8)

மடிக்கொரு வந்தன மடிக்கொரு வந்தனம்
வளைக்கொரு வந்தனம் விழிக்கொரு வந்தனம்
வா வெனுமோர் மொழியே சொலுநீ

மணங்கி ளர்ந்தந லுடம்பி லங்கிடு
மதங்கி யின்றுள மகிழுந்தி டும்படி
மான் மகளே யெனையா ணிதியே
- எனுமொழிபலநூறே, (3/4)

படித்தவ டன்கைகள் பிடித்துமுனஞ்சொன
படிக்கும ணந்தரு ளளித்தவ னந்தகிர்
பா கரனே வரனே யரனே

படர்ந்த செந்தமிழ் தினஞ்சொ லின்பொடு
பதங்கு ரங்குந ருளந்தெ ளிந்தருள்
பா வகியே சிகியூ ரிறையே
- திருமலிசமருரா, (7/8)

பவக்கட லென்பது கடக்கவு நின்றுணை
பலித்திட வும்பிழை செறுத்திட வுங்கவி
பா டவுநீ நடமா டவுமே

படர்ந்து தண்டயை நிதஞ்செ யும்படி
பணிந்த வென்றனை நினைந்து வந்தருள்
பா லனனே யெனையாள் சிவனே
- வளரயின் முருகோனே. (1)

3. நெய்

தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் தனா தனா தனா தனா

தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதன தத்தத்தா

தனதன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா

தனதன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனனா
- தந்தன தனதானா.

வஞ்சஞ்சூ தொன்றும்பேர் துன்பஞ் சங்கட மண்டும்பேர்
மங்கும்பேய் நம்பும்பேர் துஞ்சும் புன்சொல்வ ழுங்கும்பேர்
மான் கணார் பெணார் தமா லினான்

மதியது கெட்டுத் திரிபவர் தித்திப்
பெனமது துய்த்துச் சுழல்பவ ரிச்சித்தே

மனமுயி ருட்கச் சிதைத்துமே
நுகர்தின துக்கக் குணத்தினோர்
வசையறு துட்டச் சினத்தினோர்
மடிசொல மெத்தச் சுறுக்குளோர்

வலியே றியகூ ரமுளோ ருதவார்
நடுவே துமிலா ரிழிவார் களவோர்
மணமல ரடியிணை விடுபவர் தமையினு
நணுகிட வெனைவிடு வதுசரி யிலையே
- தொண்டர்கள்பதிசேராய், (1/4)

விஞ்சுங்கார் நஞ்சந்தா னுண்டுந் திங்கள ணிந்துங்கால்
வெம்பும்போ தொண்செந்தாள் கொண்டஞ்
சஞ்சவு தைந்தும்பூ
மீன் பதா கையோன் மெய்வீ யுமா

விழியைவி ழித்துக் கடுகவெ ரித்துக்
கரியை யுரித்துத் தனுமிசை சுற்றிக்கோள்

விழைவறு சுத்தச் சிறப்பினார்
பிணைமழு சத்திக் கரத்தினார்

விஜயவு டுக்கைப் பிடித்துளார்
புரமதெ ரிக்கச் சிரித்துளார்

விதிமா தவனா ரறியா வடிவோ
ரொருபா திபெணா யொளிர்வோர் சுசிநீள்
விடைதனி லிவர்பவர் பணபண மணிபவர்
கனைகழ லொலிதர நடமிடு பவர்சேய்
- என்றுளகுருநாதா, (1/2)

தஞ்சஞ்சேர் சொந்தஞ்சா லஞ்செம் பங்கய மஞ்சுர்கா
றந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் ததீ ததீ ததீ ததீ

ததிமிதி தத்தித் தரிகிட தத்தத்
திரிகிட தத்தத் தெயெனந டிக்கச்சூழ்

தனிநட னக்ருத் தியத்தினாண்
மகிடனை வெட்டிச் சிதைத்துளாள்
தடமிகு முக்கட் கயத்தினாள்
சுரதனு வக்கப் பகுத்துளாள்

சமிகூ விளமோ டறுகா ரணிவா
ளொருகோ டுடையோனனையாய் வருவாள்
சதுமறை களும்வழி படவளர் பவண்மலை
மகளென வொருபெய ருடையவள் சுதனே
- அண்டர்கடொழுதேவா, (3/4)

பிஞ்சஞ்சூழ் மஞ்சொண்சே யுஞ்சந் தங்கொள்ப தங்கங்கூர்
பிம்பம்போ லங்கஞ்சா ருங்கண் கண்களி லங்குஞ்சீ
ரோங் கவே யுலா வுகால் விணோர்

பிரமனொ டெட்டுக் குலகிரி திக்குக்
கரியொடு துத்திப் படவர வுட்கப்பார்

பிளிற நடத்திக் களித்தவா
கிரிகெட வெக்கித் துளைத்தவா
பிரியக மெத்தத் தரித்தவா
தமியனை நச்சிச் சுளித்தவா

பிணமா முனமே யருள்வா யருள்வாய்
துனியா வையுநீ கடியாய் கடியாய்
பிசியொடு பலபிழை பொறுபொறு பொறுபொறு
சததமு மறைவறு திருவடி தரவா
- என்களிமுருகோனே. (1)

4. சருக்கரை

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன

தத்தன தனதன தனத்தனா
தத்தன தனதன தனத்தனா
தத்தன தனதன தனத்தனா
தத்தன தனதன தனத்தனா
- தனதனதனதானா.

மாத முந்தினம் வார முந்திதி
யோக மும்பல நாள்க ளும்படர்
மாதி ரந்திரி கோள்க ளுங்கழல்
பேணு மன்பர்கள் பான லந்தர

வற்சல மதுசெயு மருட்குணா
சிறந்த விற்பன ரகக்கணா
மற்புய வசுரரை யொழித்தவா
வனந்த சித்துரு வெடுத்தவா

மால யன்சுரர் கோனு மும்பரெ
லாரும் வந்தன மேபு ரிந்திடு
வான வன்சுடர் வேல வன்குரு
ஞான கந்தபி ரானெ னும்படி

மத்தக மிசைமுடி தரித்தவா
குளிர்ந்த கத்திகை பரித்தவா
மட்டறு மிகலயில் பிடித்தவா
சிவந்த வக்கினி நுதற்கணா
- சிவகுருவெனுநாதா, (1/4)

நாத விங்கித வேத மும்பல்பு
ரான முங்கலை யாக மங்களு
நாத னுன்றனி வாயில் வந்தன
வேயெ னுந்துணி பேய றிந்தபி

னச்சுவ திவணெது கணித்தையோ
செறிந்த ஷட்பகை கெடுத்துமே
னட்புடை யருளமிழ் துணிற்சதா
சிறந்த துத்தியை யளிக்குமே

நாளு மின்புயர் தேனி னுஞ்சுவை
யீயும் விண்டல மேவ ருஞ்சுரர்
நாடி யுண்டிடு போஜ னந்தனி
லேயும் விஞ்சிடு மேக ரும்பொடு

நட்டமின் முப்பழ முவர்க்குமே
விளைந்த சர்க்கரை கசக்குமே
நற்சுசி முற்றிய பயத்தொடே
கலந்த புத்தமு தினிக்குமோ
- அதையினியருளாயோ, (1/2)

பூத லந்தனி லேயு நன்குடை
மீத லந்தனி லேயும் வண்டறு
பூம லர்ந்தவு னாத வம்பத
நேய மென்பது வேதி னந்திகழ்

பொற்புறு மழகது கொடுக்குமே
யுயர்ந்த மெய்ப்பெயர் புணர்த்துமே
பொய்த்திட வினைகளை யறுக்குமே
மிகுந்த சித்திகள் பெருக்குமே

பூர ணந்தரு மேநி ரம்பெழி
லாத னந்தரு மேய ணிந்திடு
பூட ணந்தரு மேயி கந்தனில்
வாழ்வ துந்தரு மேயு டம்பொடு

பொக்கறு புகழினை யளிக்குமே
பிறந்து செத்திட றொலைக்குமே

புத்தியி லறிவினை விளக்குமே
நிறைந்த முத்தியு மிசைக்குமே
- இதைநிதமுதவாயோ, (3/4).

சீதளஞ்சொரி கோதில் பங்கய
மேம லர்ந்திடு வாவி தங்கிய
சீர டர்ந்தவி ராவி னன்குடி
யேர கம்பர பூத ரஞ்சிவ

சித்தரு முனிவரும் வசித்தசோ
லையுந்தி ரைக்கட லடிக்கும்வாய்
செற்கண முலவிடு பொருப்பெலா
மிருந்த ளித்தரு ளயிற்கையா

தேனு றைந்திடு கான கந்தனின்
மானி ளஞ்சுதை யாலி ருஞ்சரை
சேரு டம்புத ளாட வந்தசன்
யாச சுந்தர ரூப வம்பர

சிற்பர வெளிதனி னடிக்குமா
வகண்ட தத்துவ பரத்துவா
செப்பரும் ரகசிய நிலைக்குளே
விளங்கு தற்பர திரித்துவா
- திருவளர்முருகோனே. (1)

## 5. தேன்

தானதன தானான தானதன தானதன
தனதான தனதான தனதான தனதான
- தனதன தனதானா

சூலதர னாராட வோதிமக ளாடநனி
தொழுபூத கணமாட வரியாட வயனோடு
தூயகலை மாதாட மாநளினி யாடவுயர்
சுரரோடு சுரலோக பதியாட வெலியேறு

சூகைமுக னாராட மூரிமுக னாடவொரு
தொடர்ஞாளி மிசையூரு மழவாட வசுவீர

சூலிபதி தானாட நீலநம னாடநிறை
சுசிநார விறையாட வலிசானி ருதியாட
- அரிகரமகனோடே, (1/4)

காலிலியு மேயாட வாழ்நிதிய னாடமிகு
கனஞால மகளாட வரவேணி சசிதேவி
காமமத வேளாட மாமைரதி யாடவவிர்
கதிராட மதியாட மணிநாக வரசோகை

காணுமுனி வே..ராட மாணறமி னாடவிரு
கழலாட வழகாய தளையாட மணிமாசில்
கானமயி றானாட ஞானவயி லாடவொளிர்
கரவாள மதுவாட வெறிசூல மழுவாட
- வயிரமலெறுழோடே, (1/2)

கோலவரை ஞாணாட நூன்மரும மாடவிரை
கொளுநீப வணியாட வுடையாட வடனீடு
கோழியய ராதாட வாகுவணி யாடமிளிர்
குழையாட வளையாட வுபயாறு கரமேசில்

கோகநத மாராறோ டாறுவிழி யாடமலர்
குழகாய விதழாட வொளிராறு சிரமோடு
கூறுகலை நாவாட மூரலொளி யாடவலர்
குவடேறு புயமாட மிடறாட மடியாட
- அகன்முதுகுரமோடே, (3/4)

நாலுமறை யேயாட மேனுதல்க ளாடவிய
னலியாத வெழிலாட வழியாத குணமாட
நாகரிக மேமேவு வேடர்மக ளாடவரு
ணயவானை மகளாட முகவான முகனாட

நாரதம கானாட வோசைமுனி யாடவிற
னவவீரர் புதராட வொருகாவ டியனாட
ஞானவடி யாராட மாணவர்க ளாடவிதை
நவிறாச னுடனாட விதுவேளை யெணிவாகொள்
- அருண்மலிமுருகோனே. (1)

பஞ்சாமிர்த வண்ணம் முற்றிற்று.

உ

சிவமயம்

குஹப்ரஹ்மணேநம:

திருச்சிற்றம்பலம்

# முதன் மண்டலமாகிய குமரகுருதாச சுவாமிகள் பாடல்

## 1. அமரர்கோ

கங்கையைச் சடையிற் பரித்துமறி மழுவங்
        கரத்திற் றரித்துருத்ரங்
    காட்டுமுவை யதளைசைத் தணிமன்றி லாடுகங்
        காளற் கபின்னமாய
சங்கரி சடாதாரி சருவாணி கல்யாணி
        தற்பரி பவானிதந்த
    தந்திமுக னோடுமற் றைந்துபெயர் நீர்மையுந்
        தன்னகத் துளதெய்வமே
மங்கையர்த மின்பெனுந் துன்பினை விரும்புமட
        மார்க்கத்தை விட்டதீதர்
    வாழ்வுக்கும் வாழ்வாய வாழ்வினை யளிக்குமுன்
        மலரடி தியானிக்கவும்
அங்கையினி னெல்லியங் கனியெனத் திருவருளை
        யடையவுங் கருணைநல்காய்
    அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
        தாதியே யமரர்கோவே.

சனகாதி நால்வர்க் குரைத்தமுறை போற்பரா
        சரர்மக்க ளாறுபேர்க்கும்
    தண்ணார் பரங்கிரிக் கண்ணே தனித்துநற்
        சதுர்வேத வுச்சிமுடிவை
வினை தீர்த் துணர்த்துவா னருண்மௌன குருவென்ன
        வீற்றிருந் தைந்துறுப்பான்
    விளக்கியருள் பாலித்த தண்ணளியை யாரறிவர்
        மெய்யன்ப ரன்றியந்தக்

கனமான காரியந் தமியேற்கும் வேண்டியே
கைவித் திடுமென்னையுன்
கைவிடா நட்புவந் தென்றைக்கு மேவுமோ
காதற் கியைந்தகண்ணே
அனகமெய்ஞ் ஞானவா னந்தமுகி லேயன்ற
னந்தரங் கக்களிப்பே
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே. 4

## 2. திருப்பரங்கிரி

ஆதியிடை யீறெனுங் காலங் கடந்ததா
யகிலமுக் குணரகிதமாய்
அத்துவித சைதன்னிய சுத்தபர தத்துவ
வசஞ்சல விலாசவெளியாய்
நீதியாய் நிறைகருணை யூறுசுக வாரியாய்
நிட்களா னந்தசிவமாய்
நின்றபர தெய்வமே தொண்டர்தொழு சைவனே
நின்னாம மந்த்ரமொருகால்
ஓதினெண் ணம்போலெவ் விடயமும் விநாடியி
லொதுங்காது கூடுமெனுநூல்
ஓகையா லத்தைநா னாளுமோதியு
முளக்கவலை யோய்ந்த தில்லை
தீதிலோ யிதனையிப் பிறவியின் பயனென்று
தெளிவனோ யாதுநினைவேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. 1

ஆணவ மலத்தினி லமிழ்ந்திய பசுக்களை
யனாரதந் தன்னகத்தே
ஐக்கியங் கோடற் கருந்தொழில்க ளைந்துநனி
யாற்றுமைம் முகனாகிநீ
மானுட னவின்றநல் லாகமத் துள்ளபடி
வளர்சிவ காருண்ணியம்
வந்திடி னடங்காத வீச்சுவர பத்திதான்
மருவுமதன் மேன்மந்தர்கள்

காணரிய பாசவை ராக்கியமுண் டாமஙன்
ககனமொடு புவனமெங்குங்
கரையின்றி நிறைவான பரமமெய்ஞ் ஞானமது
கண்ணெதி ருதிக்குமென்று
சேணுடைய சேணாடர் மோனர்மே தாவியோர்
சென்றநெறி யெற்குமளியாய்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. 2

மங்கள விலாசவுன் செம்பொனடி தனையிங்ஙன்
மனதிரங் கித்தருவையோ
மாயக்கண் வலைவீசி மோகத் தமிழ்த்துவிலை
மாதர்கட் கொப்பிப்பையோ
எங்கும் பிரகாசமுள வன்பர்பத மலர்காண
வென்றழைத் துச்செல்வையோ
ஏறவிட் டேணியை யெடுப்பது கடுப்பவெனை
யிடைவழியி லேவிடுவையோ
அங்கமெல் லாநொந்து வம்பிலலை யாதபடி
யதிவிரைவி லருடருவையோ
ஆவிவெளி யோடும்வரை நேடியமு தலையென்ன
வாட்டுவித் தருடருவையோ
செங்குவளை மஞ்சரிகொண் மொய்ம்புவளர் மூர்த்தியே
சிறியனொரு சிறிதுமறியேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. 4

## 3. திருச்செந்தில்

காரொத்த குழலிலே மேரொத்த முகையிலே
கஞ்சமலர் வதனத்திலே
கன்னனிகர் மொழியிலே கயலனைய விழியிலே
கமழ்கின்ற வாடைதனிலே
சீரற்ற மனதைச் செலுத்தியஙன் வருதுன்பு
தெரியா திதேசுகமெனச்
சிக்கியின மலைவனோ தெருடரு விரத்தியைச்
சிந்தைசெய் தாளாவனோ

கூருற்ற குசலரொடு கூடியினி துய்வனோ
கோளர்வழி நின்றுழல்வனோ
கூர்த்தவுணர் வில்லாத வேழையறி யேனெனைக்
கொள்ளவுள நீகருணையால்
ஈர்த்தி ரங்கொடுத் தாசறுத் தருளுநா
ளெந்தநாள் சொல்லியருளே
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. 1

கருப்பையுழை யதியற்ப சுக்கிலந் தங்கவது
கதழ்வாகி மதிபத்திலோர்
களனிலா விளவலாய் வந்துதித் துற்றவர்கள்
கனகமணி யணிகளிட்டு
விருப்புவகை யொடுவளர்க் கச்சடம் வளர்ந்துமத
மீக்கொண்டு மாதர்புழையில்
விழுந்துகிழ மடியுற் றயர்ந்துயிர் பிரிந்தபினர்
மெல்லிய ரரற்றவுரியோர்
உரப்புள பிணப்பறை சிறப்பொடு முழக்கியெரி
யுண்ணுநிலை சேர்த்துவகுவிட்
டுதவொரு பிடிபூதி யாகுமிது வேயிந்த
வுலகவாழ் வையவிதனை
இருட்டுமன முள்ளார் மதித்துனை யெணாரென்ற
னெண்ணமுமவ் வாறுசெலுமோ
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. 2

காலனை யுதைத்துவிதி முடிகொய்து மலரெய்த
காமரா சனையெரித்துக்
கலைமதியொ டரியண்ட ரெவரையும் வெகுண்டமுக்
கண்ணனொரு பாதியென்னும்
மூலகா ரணிசருவ லோகரட் சகிதுழாய்
முடிமகா விஷ்ணுபகினி
முக்கோண சக்கரி சடக்கரி பருப்பதி
முகைப்பய சருந்திமகிழுஞ்
சீலமே யண்டநிரை வைக்கின்ற பரவெளித்
திட்பமும் விரிந்துசூழுஞ்

சித்தவெளி தன்னிலே நானுள்ள நிலைமையுந்
தெற்றென வுணர்ந்ததீதம்
ஏலவே யெய்தாத தாழ்வா லுதித்தவெற்
கினிவரா நெறியையருளாய்
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்த சிவமே. 9

## 4. திருப்பழநிமலை

ஆழிசூல வும்புவி யெலாமொளிசெய் விண்ணின்மணி
யனையமணி முடியிலங்க
அகலுள்வட வரையைச் சடாலென்ன மோதிடற்
கானமொய்ம் பணிதுலங்க
நாழியொ ரரைக்குணிசி சரருயிர் முருக்குமொரு
நலிவில்வடி வேல்விளங்க
நடுவற்ற வீனப் பிசாசுகள் பிரேதங்க
ணடைவிட் டுளங்கலங்க
வேழமிவ ரிந்திராதி திசைநாதர் தவநாதர்
வெருவுற்று னடிவணங்க
விண்டலமு மண்டலமு மசைவுற்று நிலைபிசகி
மேருகிரி யுங்குலுங்க
ஊழிமுடி வெனநவிர மேறுமுதல் வாவென்ற
னூறுகெட வென்றுவருவாய்
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 1

கண்ணேகண் மணியே கதிக்குரிய ஞானமே
கருணையே கருணைரசமே
கருவினிற் கருவே தொழும்பனே னிதயவொண்
கமலமே கமலமணமே
விண்ணே விணொளியேநல் வேதவே தாந்தமே
மேதக வெறுக்கையரசே
வித்தார மானபுவ னப்பரப் பெங்கனும்
வியாபித்து நிற்குநிறைவே
தண்ணேறு நின்னடியை நண்ணாத பாவிபொய்
சாலவுஞ் சொற்றபாவி

தக்கோ ரிடத்துறவு பண்ணாத பாவிவெகு
தவறுக ளிழைத்தபாவி
உண்ணே ரிலாதபடு பாவிநா னுன்னரு
ளூறாதுய்ய விடனுமுண்டோ
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 2

எத்தனை படித்தாலும் வஞ்சனை பொறாமைதா
மென்னைவிட் டகலவிலையே
இதமாக வெவ்வளவு சொன்னாலு மடமன
திணங்கிநின் றுருகவிலையே
பத்திநெறி யார்நட்பு மெய்தவிலை யினியென்ன
பண்ணுவே னின்கடைக்கண்
பார்வையென் பக்கல்வரு மேல்வம்பு போமின்பு
பற்றுமெண் கண்ணனெஞ்சஞ்
சுத்தம தடைந்தபி னவற்குரிய நிருமிதத்
தொழினல்கு திவ்வியவயனே
சுகுர்தவருள் வாரியே தூய்மன வெளிக்குளே
சுடருமா னந்தவடிவே
உத்தமத் திற்கெலா முத்தம விலாசமா
யுள்ளவொரு பெரியபொருளே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 3

நாட்டுப் படர்ப்பிணிகள் சோற்றுக் குரம்பையை
நசிப்பதோ சங்கையில்லை
நாளாகு மேலருட் காளாவ னோவென்னு
நடலையோ கொஞ்சமில்லை
கோட்டுக் குசத்திரதி கொண்கனலர் சொரிகின்ற
கொடுமையோ மெத்தமெத்த
கூறுமித் துயரெலா மிச்சிறுவ னெவ்விதங்
கொண்டுதெளி வானென்னவுன்
தாட்டிக வுளஞ்சிறிது கருதிடா தோவடியர்
தாபஞ் செகுக்கும்வள்ளால்
சரதவைச் சுரியசம் பன்னபரி பூரணத்
தண்ணருட் பெருவாரியே

ஓட்டிற் பெரும்பலி யெடுத்துண்ட வொருவற்
குரைத்தமா மந்திரகுருவே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 4

நெடியவுவர் சூழுமிப் பெரியநிலை தனிலுன்
னிஜாநந்த மடையநல்லோர்
நெக்குருகு பத்தியோ டெண்ணில்பல் காலநிலை
நின்றவ ருரைத்தநெறியிற்
கொடியமன தைத்திருத் தித்தவஞ் செய்கிறார்
கொங்கைமின் னார்நிதம்பக்
குழியிலே விழுநமக் கெந்தவா றதுவந்து
கூடுமென் றுள்கியுள்கிப்
பிடிபட்ட வுழையெனக் குழையுமென் னெஞ்சைநின்
பெரியதிரு வுள்ளமறியும்
பேயினுங் கடையனே னெனினுமுனை நம்பெனைப்
பீடையி னிறுத்தன்முறையோ
உடலினுக் குயிராகி யுயிரினுக் கறிவாகி
யொளிர்கின்ற பரமபதியே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 5

சந்ததமு மிகையற விளங்குபர சிவயோக
தண்டா யுதப்பிரமமே
தண்ணளியை நாடுநர்க் கின்னமுத சாகரத்
தாரையைப் பொழிமாரியே
எந்தையே யருளரு ளெனக்கதறி னேன்மன
திரங்கினா யில்லையினிமேல்
எப்படி யரந்தைபொய்த் தின்புவந் தணையுமென்
றிதயமிக் கயர்கின்றதே
வந்தநா டொட்டிங் கிழைத்துள்ள தீமைபெரு
மலைபோ லிருப்பினும்வெளி
மணிமுன்ன ரேயிமக் குலமழிதல் போலழிய
வந்துநீ யுண்மைகூற
உந்தியிடை நின்றுன்னை யடையுமா திருவுளத்
தொல்லையொ ரெணங்கொளாயோ

உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 6

கருப்பையி லிராநின்ற வுயிர்தனக் குப்போன
கங்கிரம மாயளித்தும்
கல்லினுட் டங்குதே ரைக்குரிமை யாயவா
காரநித முங்கொடுத்தும்
திரப்படு சினைக்குணவு தேடியங்குதவியுந்
திதிசெய்நிழ லுள்ளவுன்றன்
சேவடிக ளைத்தொழுஞ் சீவனை யிரட்சகஞ்
செய்யாது விடுவைகொல்லோ
விருப்புள ரகத்திடை வதிந்துதிமி ரம்போழும்
விகுணமெய்ஞ் ஞானயோக
வித்தார வாழ்வுதந் தெக்காலு மழியாத
வீடுபெறு மாறுகங்கை
உருப்பட விடாதிந்த வுருவோடு முடிவுசெய
வுள்குமெம் பெரியபொருளே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 7

கணையன்ன தாரைவிழி கொடுமெள்ள நோக்கிக்
கருத்தைக் கெடுத்தெவரையும்
கமழ்மஞ்ச வணைமீ திருத்தியின் னுரைதந்து
காமா கமப்படிக்குக்
கணைவளைகள் கலகலென வுபயகர மலர்கொண்டு
கைச்சரச வரிசைபலவுங்
காட்டிவத னத்தோடு வதனம்வைத் தினியநற்
கனியென்ன வுடல்சுவைத்துப்
பணையம் பறித்தவுடன் மனைவிட் டகற்றும்
பகட்டிகளி னட்பொரீஇப்
பரமான நின்னையே நினையுமொரு நெஞ்சமென்
பானிமிர வருடியாணர்
உணர்வற்ற பதகருக் குதவாத தெய்வமே
யோதரிய வேதமுதலே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 8

அல்லேறு முகிலொன்று நின்றோ ரரைக்கடிகை
யாசார மாரிபெயினும்
ஆயிரங் கிரணங்க ளவிரநிமை நேரம்வின்
ணனலிகன லைச்செய்யினும்
வல்லாண்மை தெவுளும்வங் கூழிமைப் போதெங்கு
மல்கிவிற லாவீசினும்
வாரிதிகள் கிஞ்சித்து முனைகொளினு மிப்பெரிய
வையக மிருக்குமோவிங்
கெல்லாமு னாக்கினைக் குள்ளா யிருந்தவை
யிகுக்கின்ற பேருதவியை
எண்ணாம னன்னடவை நண்ணாம லுன்னடிக
ளெந்நாளு முன்னாதிதே
உல்லாச மென்றுலக மயலிலுழி தருமண்ணை
யோயானும் யாவுமுணர்வோய்
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 9

உலகிலெச் செல்வமுந் தவவிழுப் பத்தினா
லுண்டாகு முன்பினாக
உறவுள்ள துன்பெலா நீதிமு னநீதிபோ
லொழியுமென் றிறைவனூல்கள்
சொலும்வண்மை யானுமற் றுத்தியனு பவமெனச்
சொல்லளவை யானுமந்தத்
துகளறு தவத்தினின் றுஞ்செல்வ மிலையென்று
துணிவதுந் தவமானது
நலனற்ற பொய்யுரை வியர்ப்பிவைக ளாலழிவு
நண்ணுமென வுய்த்துணர்வதும்
நாணாளு நற்றவத் துயர்வதுந் தவமுள்ள
நல்லவர்க் கேயுண்டிநாள்
உலைகின்ற வெற்குமவ் வூழுள்ள தோசொலா
யுரனருண கிரியடிகளே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. 10

## 5. திருவேரகம்

எம்முடைய வடிவினிற் புராதனக் கோலமே
யிக்குழவி யாயதென்றும்
எமக்குமிம் மூர்த்திக்கு மெக்காலு மொருபேத
மின்றிந்த மூர்த்திதன்னைத்
தம்முடைய புந்தியிற் கருதிநனி போற்றினோர்
தாழ்வற்ற சீருமறிவும்
சாயுச்சிய பதவியும் பெற்றுய்வ ரென்றுமச்
சம்புவே வாய்மலர்ந்தன்
றும்மென்னு மக்கரத் தாலுமை யெனப்பெய
ருறும்பரைக் குரைசெய்ததை
ஓதுமுயர் காந்தமுமி வுண்மையுண ராதவர்க்
கோதிலிதை யென்விவாத
வெம்மையற் றொண்மையுணர் வாம்விபுத ரறிகின்ற
மெய்ப்பரஞ் சோதிவடிவே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே. 5

எங்கணு மிருந்துமறை வாயபர வத்துவை
யென்றுதன் னனுபவத்தில்
எய்தவொரு வன்கூடி யறிவனோ வப்பொழு
தெழும்புமா னந்தவடிவே
சங்கரன் சுதனானசிவசுப்பிர மணியபிர
சந்நமென் றறிவரறிஞர்
சாற்றுமிப் பொருணிட்க ளாதீத வுண்மையைச்
சாருமென நானுமறிவேன்
மங்கள குணாளகுக வித்தீர்வை பற்றியிலை
மறைகா யெனக்கணித்து
வழுத்துவ தலாதுன்னை நூதன மெனப்பன்ன
வாயில்லை சிறுவரையுமால்
வெங்கணர வச்சிர சமுங்கநட மாடுசிகி
மேனிலவு மாணிக்கமே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே. 7

## 6. திருக்குன்றுதோறாடல்

வண்ணமுடை யொருதுரும் பாலமரர் வலியெலா
　　　மக்கினமடை யப்பண்ணியும்
　மழுமிருக முழுவையதண் மதகரிப் போர்வைபிறை
　　　வாரியர வந்தரித்தும்
விண்ணவ ரலக்கணற வென்றுபெரு முந்நகரம்
　　　வேவமுறு வல்விளைத்தும்
　வேதனரி யுந்தேடி யறிவரிய பேரொளி
　　　விரித்துமுள வொருவன்முன்னே
தண்ணவக் குடையனின் றலர்விடுத் தானெனுஞ்
　　　சரிதமிவ் வுலகிலுளதேற்
　சருகனைய வெற்கந்த மதனஞ்சு வன்கொலுன்
　　　றண்ணளி கிடைக்குமாயின்
மண்ணவரும் விண்ணவரு மென்வய மெனச்சொல்ல
　　　வாயுண்டு வாழ்வுமுண்டே
　மங்காத வின்பர்செறி குன்றுதோ றாடல்வதி
　　　மஞ்சார் பெருந்தகையனே. 6

## 7. திருச்சோலைமலை

பரியேற நினையொருவன் முதுகேற வலியற்ற
　　　பண்புபோ லுன்பதத்தைப்
　பார்க்கவதி மோகுற்றம் மார்க்கநெறி யறியாது
　　　பலவித நினைந்துருப்ப
எரியின்மெழு கெனவுருகு கின்றே னதற்கொர்தடை
　　　யிலைகொலோ நின்கணுன்னை
　ஏழைபங் காளனென் றோதுமுறை மைக்குநீ
　　　யென்னவகை சொல்வைபெரிய
பரிவொடு திருக்கரத் தாலெனை யணைத்தெனது
　　　பருவர லகற்றியருளாய்
　பாரப் பணாமகுட சேடனைச் சிறுவிரற்
　　　பணியா மிலைந்தகரிய
சுரியலம் பிகையருட் டொண்டர்கற் கண்டெனுஞ்
　　　சுகவருட் கருவூலமே
　தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
　　　சோலைமலை மேவுகுகனே. 1

## 8. திருவிராமேச்சுரம்

கல்லிலு மிரும்பிலுங் கடுவயிர வாயிலுங்
காசினியி னாருரிக்கக்
கற்றவர்கள் வந்தாலு மென்மனக் கல்லினைக்
கண்டுபின் னிடுவரந்தோ
சொல்லரிய நின்சரண பங்கேச மக்கலிற்
சுகமாக மலருங்கொலோ
துகளற்ற வொருகருணை புரியினா னுய்யும்வகை
தோன்றுமிஞ் ஞாலவாழ்வு
நில்லா தெனக்கருதி முதனூ லுரைக்குநெறி
நிஜமென் றுணர்ந்தனுதினம்
நேசித்த வாருணியு நிஜவருணை முனிவனு
நிரம்பவந் தித்தபெரிய
வல்லப மிகுந்தவொர் சிதாகாச ராசவென்
மனவெம்பல் காதியருளாய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. 10

## 9. திருப்புலியூர்

ஆதார மின்னது நிராதார மின்னதென்
றற்பமுந் தெரிவலியிலா
அசடரு மெனைப்பற்றி வசைபேசி யெள்கியதை
யறியுமே நின்றிருவுளம்
வாதாடி வாதாடி யிரையுமென் மேனண்பு
வைத்தவர்கள் கண்ணின்முன்னே
மகிமைபெற் றுன்கிணக னாயுய்ய வருடிநன்
மாமறைக் கொடியுயர்த்த
வேதா விரிக்கரும் பிரணவப் பொருள்சொலும்
வித்வசா மர்த்தியநிபுண
விசதது ளிப்பிரிய விரதநம் புக்கினிய
விமலவின் பக்குழியமே
மீதானர் குடியையீ டேற்றிய பிரானே
விசித்திரமயி லூருமுருகே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. 2

## 10. திருத்தணிகை

என்னைநீ பணியென் றெனக்கறிவு தந்தநா
ளெந்தநா ளந்தநாடொட்
டிந்தநாள் வரையுமுன் றன்னையே கூவினே
னெவனென வுசாவினாயின்
றுன்னுடைய சமூகத்தி லேனுமென் குறையெடுத்
தோதிவதி லறியவெனினும்
உரியவர்க ளில்லையெளி யேன்மிக மயங்கிட
வொளித்தவிட முந்தெரிகிலேன்
இந்நிலந் தன்னிலே நின்னறிவு கொண்டவர்க
ளெவரையுங் கண்டிறைஞ்சி
இன்னநடை யின்னபடி யென்றுணர வென்றானு
மிதுவரையி லுங்கண்டிலேன்
சொன்னமொழி விபலமா குங்கொலோ வருணகிரி
சுவாமியே சுகநேமியே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பிலுறை
சுப்பிரமணி யப்பிரமமே. 6

## 11. பூரணானந்தகுகன்

இனியவட மொழியமுத முண்டுதென் மொழிவார
மென்றகட லைக்குடித்தோ
ரிணையிலா வுன்சரிதை கூறும்வலி கொண்டன்பி
லேறுமொரு கச்சியப்பர்
மனதிடை வதிந்தபொரு ளேவீணை நாரதன்
மனக்கவ றபுத்தபதியே
மாணா றெழுத்துச்ச ரிப்பவர் நினைப்பினை
மதித்தரு ளருட்பரவையே
கனிமலர்க டந்தம்பர் நளிர்நிழல் செய்யருங்
கானமார் மலயமுனிவன்
கருதுமொரு கடவுளே கருணைபெரு கருணகிரி
கவிகளி லமர்ந்தபரம
புனிதனே குமரகுரு தாசனென வெற்குமொரு
புகழ்தந்த வாபுணர்ந்தாள்
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே. 10.

## 12. குந்துகால்

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்ததான

அம்புதநி றைந்துவிரி வெண்டிரையு லம்புவிழு
மம்பெருகு குந்துகாலில்
அந்தணர்வி ரும்புமலர் தந்திடும ரம்பலவ
டர்ந்திடவ ளம்பொயாத
பம்பரமு றழ்ந்தவிர்கு ரும்பைகட ருஞ்சிறு
பசுந்தழைசெ றிந்தகேளி
பம்பிநிழ றந்திடவ மைந்ததளி யின்கணை
படுஞ்சடைநி லந்துழாவச்
செம்புநிற வம்பரம ணிந்துகர மொன்றிலொரு
தெண்டதுவி ளங்கவாசச்
செங்கழலி லொண்குறடி லங்கவளி யன்பர்க
டினந்தினமி றைஞ்சிவாழச்
சம்ப்ரமமு டன்றிகழ ருந்தவனி ரும்பரம
சங்கரிப யந்தசூர
சண்டன்முரு கன்குமர னென்றுதொழு கின்றவர்கள்
சஞ்சலம கன்றுபோகும். 1

## 13. கதிரேசன்

அன்னை தந்தையுனை யன்றி யிப்புவியி
லாரை யும்புகற னீதியோ
அந்த ணற்கரிய பிரண வப்பொரு
ளகத்தி யற்கருளொ ரடிகளே
தன்ன கந்தனை யறிந்து நாடுநர்
தமைப்பு ரக்குமரு ளிறைவனே
தற்ப ரிக்கினிய புத்ர னேயமல
சிற்ப ரக்ககன வட்டமே
என்னை யாளுமுரை பன்னி மேவுமுனை
யென்று கூடிநனி வாழுவேன்
ஏக னேபரம யோக னேயுலக
மெங்கு மல்குபரப் பிரமமே
கன்னி வந்தமனம் வென்ற பேதநிலை

கண்டு ளாரடையு மின்பமே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னானகதி ரேசனே. 1

வறுமை யென்னொர்பிணி யிற்பி ணங்கிமன
மறுகி வாடுவ தலாதுழல்
மனது சித்திர விளக்கெ னச்சமைய
மாத்தி ரைப்பொழுது மறிகிலேன்
சிறுவ னைச்சிறி தணைக்க வென்றுனது
திருவு ளத்தினி திருந்திடிற்
சித்த மிப்படி மயங்கு மோபுரையில்
செல்வ மென்னையு மொறுக்குமோ
அறிஞர் தம்மிரு தயச்ச ரோசவளி
யதைய ருந்திமகிழ் தும்பியே
அதுவி தென்றுகரு தாத டங்குபிர
மானு பூதியி லனாரதம்
கறையி லாதில கனாதி யேயெனது
கரிச றுத்தருள்செய் தெய்வமே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னானகதி ரேசனே. 9

அஞ்சு ரும்புவிழு முண்ட கக்குரவ
னப்ப னுக்கிளைய சேயெனும்
ஐங்க ணைக்கிழவன் வந்து லாவுமக
மான விச்சட மெடுத்துநான்
பஞ்ச ரப்பறவை போல வீதறுதி
பட்ட பங்கமது போதுமால்
பாவ நாசமெனு நின்வி ழிப்பரிசு
பற்றி யென்றளைக ளாயுள
பஞ்ச பாசமு மறுத்தெ னைப்பெரிய
பார்வை கொண்டுதரி சித்தவண்
பரம னாமுனை யறிந்த ளாவிமிகை
பாற்று மார்க்கமினி வேண்டுமீ
கஞ்ச வீயடியி னருளி னின்றுபுகழ்
கழறி னோற்கருள் புரிந்துளோய்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னானகதி ரேசனே. 10

## 14. உள்ளூர்ச்சிவசுப்பிரமணியர்சதகம்

சரியையுங் கிரியையும் புதுமணக் கோலச்
சடங்கென நினைந்துகொளவும்
சகயோக மணவறையுண் மணமகளு மகனுமுள
தரமென வறிந்துகொளவும்
அரியமெய்ஞ் ஞானமபி மானமச் சந்துறந்
தணைதலென வுய்த்துணரவும்
அங்கனுண் டாகுமின் பதையிருவ ருஞ்சொலா
வதிகுய்ய மெனவோரவும்
எரிநிரய யாதனையை நூறருண கிரிநிலையு
மிதுவே யெனத்தெளியவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
திரிபுகே டில்லினிய வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. 100

## 15. வேண்டுகோள் - துதிபரம்

போசவு லாசவி லாசப கேசவ பூர்வச தாசிவனே
போதவி பூபரி பூசிகி வாகன பூதகிர் பாகரனே
ஈசம கேசவி சேடவி சாகசு ரேசப ராபரனே
ஏககி யாதத யாளவ காதமி லாதுச தாநினைவோர்
நேசவ ரோதய பீமவி ராமவ னேகக லாநிதியே
நீதவி வேகசொ ரூபபி ராமண னேபிர சாதசிதா
காசச காரர காரவ காரண காரப வாகுகமா
காரண பூரண தாரக னேகறை காதிவி ராவுதியே. 1

## 16. கருணாகரவேலன்

மண்ட லத்துயிர் யாவையு மாண்முதால்
வண்டு மொய்க்குநன் மஞ்சரி மொய்ம்பினோய்
கொண்ட லைப்பழித் துள்ள வருட்கொடைக்
கோவே யென்றனை யாளவென் றன்பினென்
வெண்ட மிழ்ச்சொலுங் கேட்டருள் செய்வையோ
வீதி நாய்பொ லலைந்திடச் செய்வையோ

அண்டர் பூதி யடைந்திடச் செய்வையோ
வறிகி லேன்கரு ணாகர வேலனே. 1

வஞ்ச னாயறி வீனர்க ணம்புமிவ்
வாழ்வி லேயுழன் றிப்புலை யாக்கைதான்
துஞ்ச வந்தகன் கையிற் கொடுப்பையோ
சூழ்ந்து சூழ்ந்தினுங் கத்திடச் செய்வையோ
நஞ்ச முண்டு நடித்தவர் செம்மலே
நங்கை வள்ளிதெய் வானை மணாளனே
கஞ்ச மெல்லடி யீந்தெனை யாள்வையோ
காண்கி லேன்கரு ணாகர வேலனே. 2

கன்னி மாரறு வர்க்கட்ட சித்தியைக்
காத லாயன் றதிர்த்த பிரானுறை
கன்னி நாட்டங் கயற்கண்ணி தன்னகம்
கண்கு ளிர்ப்புற வுள்ளகைக் கிள்ளையே
தென்ன விர்ந்துயர் தென்கயி லைப்பதிச்
செல்வ னுக்குந் திருப்புகழ் செப்பிய
என்னை யாளுடை யானுக்குஞ் சாமியே
யென்னை யீகரு ணாகர வேலனே. 10

## 17. அயிலரசு

நாவுந்தளர் வுறுகின்றது நற்றோத்திர நழுவ
நோவுங்குடி கொளுகின்றது நுன்சிந்தை மிகாமல்
கூவின்றனை கிளர்கின்றது குருமோன மெழாமல்
மாவின்பெனை யெவ்வாறுறும் வலியாரயி லரசே. 7

## 18. எழிலார் சுரும்பு

எழிலார் சுரும்பு கிளரோதி வாணி யிறைவன் படைக்கு முலகிற்
பழிபாவ வஞ்ச மிகவே புரிந்து படுபாவி யாகி நிதமும்
அழல்வீசு கும்பி யிடையாகம் வெந்து கவலா திருக்க வருளாய்
பொழிலார் கதம்ப விரைவீ யலங்கல் புனையந்த காரி
பொருளே. 1

சிவபால பைம்பொன் முடியாறு மன்னு சிகரங்கண் மின்னு
மெழிலும்
துவர்வாய் துலங்கு முகமாறு மன்பு சொரிபன்னி ரண்டு விழியும்
சுவவாளு மும்பர் பகைகாது மேதி சுடர்பன்னி ரண்டு கரமும்
தவவாழ்வு பொங்க வவிர்தாளு நன்கு தரிசிப்ப தென்று
தமியேன். 2

பனியே கிளர்ந்த புவிமீது பொங்கு பசியான் மடந்தை மயலால்
அனியாய மென்னும் வழிநேடி நின்றெ னறிவே யிழந்து
கெடவோ
உனைநா னினைந்து தொழுதே னகண்ட வுணர்வா யியங்கு
குகனே
கனிவாய் திறந்து வருகென்று கூறொர் கரையென்று காது
புகுமோ. 3

கலைவாணி பத்தி மையொடே பழிச்சு கழல்வெற்பு மங்கை
யுடைய
முலையீ மகிழ்ச்சி யமுதங் குடித்த முளையே செழித்த பழநி
மலைமீ திருக்கு மழகா வழுக்கின் மனதூ டிருக்கு மனகா
உலைவாயி லிட்ட மெழுகா யிருக்கு மெனைநீ யுகப்ப
தெஙனே. 4

நிலையாய வேம மெனவோது ஞான நிருவாண மேவ நினது
நலியாத பாத மதைநாடி நாடி நலமேது மின்றென் மனது
மலையோர முய்யு மறவேடர் கையின் மறிபோன் மயங்கு
கிறதே
கலிகீழ் தயாள மிதுவோ கெடாவொர் கனியே குமார முனியே.
5

கடியே றரத்த மெழினீலம் வைத்த கவினார மிக்க மிலைவோய்
செடிசே ரமித்திரர் பகைவா வுருத்திரர் சிறுவா சுவர்க்க
ரிறைவா
படியா நிலத்தின் மலைபோ லளப்பில் பவமே யிழைக்க
வெனவோ
வடிவான மக்க ளுருமேவி நிற்கு மகனாகி நிற்ப னிஙனே. 6

துடிடுண்டு டுண்டு டுடுடுண்டு டுண்டு தொகுதொந்த மென்று
முரலச்
சுடுகண்ட நின்று நடனஞ்செய் நம்பர் சுதனென்று வந்த
பெரியோய்
அடிகண்டு கொண்ட வருளன்பர் சொந்த மணுவும் பெறாது
சிறியேன்
நடுவன்க ணின்று வருமொய்ம்பர் முன்பெ னவில்வேன்
விளம்பியருளே. 7

உன்மீது வைத்த நினைவான பற்றை யொருபோது மாற்ற
நினையேன்
என்மீது வைத்த புரிவாமு னட்பு மிடையா திருக்க வொருகால்
என்மீது பட்ச மிலியா யெனைப்பெ ரிதுநீ மறக்க வரினும்
உன்மீது குற்ற முறையே னெனக்கு ளுணர்வாக வுற்ற குகனே.
8

பதிஞான மின்றி யொழியாது சன்ம நிழலென் றுணர்ந்த
பரிவோர்
மதியார்க ளிந்த நிலவாழ்வை யென்றன் மடமோக மிஞ்சு
மதிதான்
நிதியேது மின்றி யிதிபோல வந்த விழிவே விரும்பு கிறதால்
பதியாக வந்தி னருளே புரிந்து னடியீ குமார பரனே. 9

கரியா னனத்த னிளையோ னெனத்தி கழுமேச கத்து ஞமலிப்
பரியோ யுனொப்பி லருளா னினைத்த படியே சுகிக்க வருண
கிரியார் தமக்கு நெடுவாழ் வளித்த கிருபாளு நித்த நினையே
பிரியாத நட்பி லடியேனை வைத்த பெரியோ யணைத்து
மருளே. 10

## 19. பகலெல்லாம்

பாடுவே னின்னைப் படிப்பேனுன் மார்க்கமுறை
சூடுவே னின்னடியென் றொங்கன்முடி-நாடிச்
சருவசதா காலமுஞ் சண்முககா வென்பேன்
இருதயா னந்தமளி யே. 2

## 20. உலகவாழ்வு

உலக வாழ்வை யுறுதியென்
றலையு மூட ரகமெலாம்
கலக மேசெய் கருவியார்
வலைவி டாது வளையுமே. 1

சாமி நாத சண்முகா
காம னோபு கன்மமே
வாம லேசெய் வந்தெனாய்
நேம நேடு நெஞ்சமே. 2

பூசி வாவி பூதிநீ
றாசி லாத மேனிமேன்
மாசில் பூதி மல்குவாய்
நேச மான நெஞ்சமே. 3

காறு கெட்ட கந்தனால்
ஊற றுக்க வுள்ள நீ
வேறெ ழுத்தை வெஃகுறேல்
ஆறெ ழுத்தை யன்றியே. 4

சாம மோது மாசதா
வீமன் மைந்தன் மேனியாம்
ஓமு மெம்பி ரானினோ
ரேம மந்த்ர மேயரோ. 5

இறைமு னிட்டு ணாதவூண்
கறையை யொக்கு மேகலாம்
உறவ றுத்த வூனிடேல்
வெறிதில் சுத்தன் வேலனே. 6

நிலவு மேனி நிருமலப்
புலவ னெந்தை பொருவில்கால்
மலரை நாளும் வழிபடின்
விலகு மெந்த வினையுமே. 7

வடிவு மைந்த னடிமலர்
வடிவு கண்டு மகிழ்பவர்
வடிவு கொண்ட மடவரல்
வடிவை வண்டு புகல்வரே. 8

ஆதி யந்த மற்றசேய்
சீதம் விஞ்சு சேவடிப்
போது கண்ட போதையர்க்
கேத னந்தை யிச்சையே. 9

இச்சை நோய ரெத்துணைப்
பச்சை மாழை பார்க்கினும்
துச்ச வாசை சோர்வரோ
உச்சு வாச வுள்ளமே. 10

வரையி லும்பை வண்டறை
சுரம டர்ந்த துறையிலும்
விரத நோற்க வேண்டுமோ
சரண டைந்த தாசரே. 11

நிட்டை கூடி நிறுவினும்
சட்டி நாதர் தயவிலார்
ஒட்டி வாழு முரனுறார்
விட்டி டாது விடுதியே. 12

முத்த னான முருகனைப்
பத்தி யோடு பணிகுநர்
செத்தி லாத தெளிவிலே
நித்தம் வாழ்வர் நிலவியே. 13

அருணை நாத னறிவினால்
மருவு தேவ மணியருள்
முருக வேளை முழுவதும்
கருதும் யோகு கமழுமே. 14

# 21. போற்றிவிண்ணப்பம்

ஐயனே யரசே போற்றி யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள் கடவுளே போற்றி போற்றி. 1

போற்றுவிண் ணவர்கோன் போற்றி புரிதவத் தொண்டர்க் கின்பம்
ஆற்றுநல் லழகன் போற்றி யாடுமம் பரியோன் போற்றி
நீற்றினைப் புனைந்த மேனி நிலவருட் குன்றம் போற்றி
சீற்றமெம் மேற்கொ ளாவோர் சிவசுப்பிர மணியம் போற்றி. 2

மணியனி மால்வி ரிஞ்சன் மற்றுள கணங்கள் யாவும்
பணியநின் றவனே போற்றி பரமனே போற்றி யன்பர்
அணியடி யலரே போற்றி யாக்கிநன் களித்து மாய்க்குங்
குணமுடை யத்தா போற்றி குமரவேள் போற்றி போற்றி. 3

போற்றிவந் தாளு முன்றன் பொன்னடிக் கமலம் போற்றி
தேற்றுவா ருன்னை யல்லாற் றிக்குவே றில்லை போற்றி
மாற்றரும் பிறவிக் காட்டை மடிக்கமெய்ஞ் ஞானத் தீயை
ஏற்றுமெஃ குடையாய் போற்றி யெங்குறை தவிர்ப்பாய் போற்றி. 4

பாய்நதிக் கிடையோன் வாம பாகமே கொண்டா டன்னைத்
தாயென வுவந்தாய் போற்றி தனிப்பரஞ் சுடரே போற்றி
வீயிலாப் புத்தேண் மாதை வேட்டுமற் றொருத்திக் கன்று
நாயக னானாய் போற்றி நான்மறை முதல்வா போற்றி. 5

முதலுமாய் நாப்ப ணாகி முடிவுமாய் நின்றாய் போற்றி
சததள பாதா போற்றி சகச்சிர நாமா போற்றி
மதிபுனை பரம னார்க்கு மதலையாய்க் குருவாய்த் தேவர்
பதியென வுளவேள் போற்றி பரஞ்சுடர்க் கண்ணா போற்றி. 6

கண்ணுமாய்க் கருத்து மாகிக் காணொழி லெந்தை போற்றி
விண்ணுமாய் மண்ணு மாகி விளங்கருட் டேவே போற்றி
பண்ணவர்க் கருளத் தண்ட பாணியா நின்றாய் போற்றி
தண்ணருட் கடலே போற்றி சதுர்முகற் கிறைவா போற்றி. 7

இறைவனே போற்றி யாதி யெந்தையே போற்றி வேலுக்
கிறைவனே போற்றி நீப விணரணி சிவனே போற்றி
மறைபுக லரிய வெங்கண் மாதவ மணியே போற்றி
குறைவறு நிறைவே போற்றி குளிர்சிவக் கொழுந்தே போற்றி
8

கொழுமையிற் குளிர்மை போற்றி குக்குடக் கொடியாய்
போற்றி
குழுமிய சிவக ணங்கள் கும்பிடுங் கழலாய் போற்றி
தொழுபவர்க் கருள்வோய் போற்றி சுந்தரா போற்றி யென்னை
முழுதுமாள் பவனே போற்றி மோனநா யகனே போற்றி. ௯

நாயக மானார்க் கெல்லா நாயக மானாய் போற்றி
தாயென வருவாய் போற்றி சண்முகத் தரசே போற்றி
தீயரிப் பெயரோற் கன்று தெய்வமுங் குருவு மான
நீயெனைக் கலந்தாள் போற்றி நித்தனே போற்றி போற்றி. 10

## 22. அமிர்தமதி

பாழான வுடலெடுத்தேன் பயனறியேன்
பண்பில்லாப் பாவி யானேன்
தாழாத வுனைமறந்தே னெனையறியேன்
செய்தவெலாஞ் சமித்துக் கொண்டு
சூழேதப் பிரபஞ்ச வாசனையை
மாய்த்துனடித் தொழும்பர் நாளும்
வாழேக வீட்டினுக்கே வரவழைத்தி
யயில்பிடித்த வடிவி னானே. 2

காத்தாளு முன்னையல்லான் மற்றொருவர்
காப்பார்கொல் ககனத் தோர்சூர்
தீர்த்தாண்ட பெரியோய்கா வெனத்தினமு

மனத்துள்கிச் சேவை செய்யுங்
கோத்திரமு ளாரெவர்க்குங் குடிக்கடவு
ளானவருட் கோல ஞாலம்
மாத்திரந்தா னோவறியும் வானுலகு
மறியுமருள் வாழி மன்னோ. 4

வாழியநீ வாழியவோர் தெய்வமகண்
முருடர்மகண் மஞ்ஞை வாழி
கோழியெனுங் கொடிவாழி கொற்றமுடை
யயில்வாழி குடிலை வாழி
ஊழிதொறு முன்னடியார் வாழியரும்
பொன்னடிவாழ் வுறவே வந்த
ஏழையே னுயுமாறிங் கெவ்வணமோ
வவ்வணம்வந் தியம்பி டாயே. 5

ஏழையிங்கே யினிப்பிறக்க ஞாயமில்லை
காணெவையு மினிமை யில்லாப்
பீழையெனத் தோன்றிநினை யடைதனிஜ
மெனுங்குறிப்புப் பிறங்க லானும்
ஊழுறுதி போழ்ந்தாளு முருத்திரனா
முனையடுத்த தானு மோவா
ஆழவருட் கடலருணை யான்வாழ்வி
லென்னையும்வை யமிர்த விண்ணே. 10

## 23. சிறுமைநீக்குயர்செல்வம்

பீத மோர்தரு மிக்க ளித்துயர் பெற்றி யேதுமி லாதுதன்
தாதை யைக்கொலை பண்ணி யீன்றவ டன்னை யும்புணர்
பாவிமா
பாத கந்தப நோக்கி யாளிறை பால னான சுவாமியென்
தீது கண்டெதிர் வந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர்
செல்வமே. 1

கருட னன்ன முனிந்த மஞ்ஞையை யாயி ரங்கண னீடெழில்
உருவ மாமொரு மஞ்ஞை யைத்தொடர் நோற்ற மாதவ
வுத்தியை

மருவ வேல்வகி ருருவி லேயெழு மஞ்ஞை யைப்பரி
யாக்கொளும்
திருவ னென்முனம் வந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர்
செல்வமே. 2

வில்லை யாறொளி யாயி ணைந்துவி ளங்கு மின்களொ
ராறுபேர்
நல்ல கைக்கறு பிள்ளை யாயவர் நட்பி னூட்டமு துண்டெலாம்
வல்ல நாயக னாகி யுள்ளவன் வலிய வந்தினி யென்சொலிற்
செல்ல லுன்கட னென்ற தேயெங்கள் சிறுமை நீக்குயர்
செல்வமே. 4

வானின் மாதொரு பாங்க ருந்திரு மானின் மாதொரு
பாங்கரும்
கான றாமலர் சூடி வைகம காவ னப்பொடு நடுவமர்
ஞான நாயக னான சண்முக னாயி னேனையு மாள்வதாத்
தேனின் மேன்மொழி தந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர்
செல்வமே. 6

ஓது செந்தமி ழானி ரம்பனு பூதி சொன்னவ னோடுநல்
மோத மாமொழி பேசி யேதமு டங்கு கொன்றருள் சேயவன்
வேதன் விண்டுவ லாரி செம்பதி வேட்பு றாதவன் வாழ்வவாஞ்
சேத னந்தழை வுற்ற தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே
10.

## 24. உள்ளக்களி

முண்டிதமில் சிறுசிகையு மிடையிலணி கவுசனையு
முழுமதிய மெனமிளிரு முகமுமொருகைத்
தண்டுமுர முறுபுரியு மிளமையுடை யுருவுமெழி
றரவிலக விருடிசுர ரடிகளெவரும்
கண்டுநல னடையவென வமிர்தமழை பொழிபெரிய
கருவிகவி பழநிமலை யுறைபெரியவன்
தொண்டனென வுளவெனது மனதிலுள னிரவுபக
றுணையுமவ னணைவுமவ னினைவுமவனே. 5

## 25. திருவுயர்ந்தவாறெழுத்தான்

செந்தமிழைச் செவிமடுத்து மகிழுந் தேவைத்
திறலிடும்ப னுயிர்முருக்கி யெழுப்புந் தேவைப்
புந்திநிறை வுடையருண கிரிசூழ் தேவைப்
புகரிகந்த கரவருடங் கடக மாதம்
வந்தவொரு புகரிரவிற் பழநிக் கோவில்
வரவிஞ்ஞான் றருளவில்லை யருள்வே மந்நாள்
பந்தமற வருதியெனப் பணித்துப் போந்த
பண்ணவனைப் படர்பவரெம் பரமர் தாமே. 10

## 26. சிவலோகசுந்தரமாலை

பரிதிமதி சேயரிபொன் பளிங்குசனி பாம்புகளும்
விரிதலைநாள் வேளைகளு மிகையடுநின் னடியவர்கட்
குரியநலம் புரியுமன்றி யொருபோழ்தும் படர்புரியா
தெரியலருந் தொண்டிழைப்பார் சிவலோக சுந்தரனே. 1

எத்தனையோ தெய்வவகை யெத்தனையோ செய்கருமம்
எத்தனையோ தொடர்மார்க்க மிப்புவியி லேயுள நீ
அத்தனையும் வேண்டாமே யருணெறிகா முறவிழைத்த
சித்திரத்தை நான்மறவேன் சிவலோக சுந்தரனே. 3

## 27. அபிமான மறுத்தல்

முதுமறைகள் புகழ்மணியை முதியர்மொழி யொளிர்மணியை
மூடரறி யாமணியை மோன மணியை
மதர்வுகெழு மாவறிவுக் குருமணியைத் திருமணியை
மதிநடன மன்றமிருந் தவிரு மணியை
நிதமணியைக் குமரகுரு தாசனகத் தசைமணியை
நினைப்பவர்க்கு வீடுளதென் றிமிழு மணியை
இதமணியைப் பரசிவசுப் பிரமணிய மதை நினையு
மிதயரடி மலர்களென் னவிர முறவே. 1

## 28. மறைமுடிவு

மூச்சுமன மற்றிருப்பார் வேட்புறு
பராபரமா முதல்வா நீதான்
மாச்சரிய முடையென்னோ டிருந்துமதி
தூரமென மறைந்து நிற்றல்
ஆச்சரியத் தாச்சரிய மேயதனை
யானறிய வருளல் வேண்டும்
பூச்சனிப்பி லாவருண கிரியிறைவ
நான்புகழும் புனித வேளே. 3

## 29. பங்கிகள்

திருமாலைமாற்றுத்திரிபங்கி ஒப்புமைபற்றிவந்த கலித்தாழிசை
(ஒற்றிலாச் செய்யுள்)
தான தானன தானன தானனா தான தானன தானன தானனா

1. மேலமூககுகாசலபாலசீ வேலசாமிதுனோவறுவாலசீ
சீலவாறுவனோதுமிசாலவே சீலபாலசகாகுகமூலமே
அடியெதுகைத் தொகை வஞ்சி விருத்தம்.

2. மேல மூக குகாசல
வேல சாமி துனோவறு
சீல வாறு வனோதுமி
சீல பால சகாகுக.

அடியெதுகையோடொரூஉவெதுகையும்
அந்தாதித் தொடையும்பெற்ற கலிவிருத்தம்

3. மேல மூக குகாசல பாலசீ
சீல வாறு வனோதுமி சாலவே
வேல சாமி துனோவறு வாலசீ
சீல பால சகாகுக மூலமே.

## 30. பொன்மயிற்கண்ணி

சொல்லரிய சின்மயமாச் சொல்லவுள்ள பூரணமாம்
வல்லவனை நான்கூடி வாழ்வேனோ பொன்மயிலே. 1

மட்டுப் படாதவருள் வள்ளலென வேயிருந்தும்
தட்டுப் படாதவனைச் சார்வேனோ பொன்மயிலே. 5

அயிலைப் பிடித்தானை யம்பரமாள் கோனைக்
கயிலைப் பதியானைக் காண்பேனோ பொன்மயிலே. 8

தேம்பெருகு சந்தமத்தர் தேடியிட மார்க்கமின்றிச்
சாம்பலிட்டு மையறந்த சாமியெங்கே பொன்மயிலே. 20
தேவாதி தேவன் சிவஞான தேசிகனை
வாவென் றழைத்துவர மாட்டாயோ பொன்மயிலே 28

வேலைப் பிடித்தசெங்கை வேந்தை யழைக்கவுன்றன்
காலைப் பிடித்தேனென் காதலாற் பொன்மயிலே. 32

இன்பக் கடல்படிந்த வெந்தை யருணகிரி
அன்புக் கிசைந்தவனை யாளவுரை பொன்மயிலே. 40

குமரகுருபரன் றிருவடி வாழ்க!
திருச்சிற்றம்பலம்.

உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம :

திருச்சிற்றம்பலம்

# இரண்டாவது மண்டலமாகிய திருவலங்கற்றிரட்டு

## காப்பு

### குறள் வெண்பா

பொன்னாரந் துன்னும் புயத்தானை மாமுகவன்
பின்னோ னிதற்கருள் காப்பே. 1

கோளில் புகழ்க்கயிலைக் கோன்முருகை யேத்தவவன்
தோளுங் கடம்புந் துணை. 2

குமரகுருதானே கொடுக்குமென லங்கால்
குமரகுரு தாசன் குறிப்பு. 10

## 1. தௌத்தியம்

பண்-கொல்லி

அரஹர மந்திர வமல நிரந்தர
சரவண சம்பிரம சங்கர புத்திர
சுரபதி பூம சுகோதய போதக
பரிபுர சததள பாத நமஸ்தே 1

ஆதி யனாதியு மான வரோதய
சோதி நிலாவு சடானன சுபகர
வேதக சமரச விண்டலர் பண்டித
பாதக கண்டன பாத நமஸ்தே 2

இந்துள லம்பக விங்கித மங்கல
சுந்தர ரூப துவாதச கரதல
சந்திர சேகர தடதா கிடதடப்
பந்திகொ ணிர்த்தன பாத நமஸ்தே 3

ஈசுர நந்தன வீசுர புங்கவ
தேசுறு குண்டல சித்திர பந்தன
ஆசறு சஸ்திர ஹஸ்த சரோருக
பாச விமோசன பாத நமஸ்தே 4

உச்சித மஞ்ஞையி லூரதி மோகன
நிச்சய வுத்தர நித்ய மனோலய
சற்சனர் மித்திர சத்துரு கண்டன
பச்சையம் புஷ்கர பாத நமஸ்தே 5

ஊர்த்துவ நாடகர்க் கோதிய தேசிக
ஆர்த்த தயித்திய ரடறெறு காதக
கூர்த்திகை வீரிய குக்குட கேதன
பார்க்க வருங்குக பாத நமஸ்தே 6

எண்ணறு வைபவ விந்த்ர விசேஷண
புண்ணிய வுத்தம பூரண பச்சிமக்
கண்ணில குஞ்சிவ கந்தகிரு பாசன
பண்ணவர் பூஜித பாத நமஸ்தே 7

ஏரக நாயக வென்குரு நாயக
தாரக நாயக சண்முக நாயக
காரக நாயக கதிதரு நாயக
பாரக நாயக பாத நமஸ்தே 8

ஐங்கர சோதர வம்பிகை காதல
மங்கள வல்லி மனோரத குஞ்சரி
இங்கித காவல விகபர சாதக
பங்கயன் மால்பணி பாத நமஸ்தே 9

ஒகர மஹாரத வொளிர்புய வமுதர்கள்
புகழுப வீதவி பூதிகொண் முண்டக
ரகித விதூன லலாட விலோசன
பககுஹ பாவக பாத நமஸ்தே 10

ஓமர ஹரசிவ வோஞ்சர வணபவ
ரீமர ஹரசிவ நிகழ்பரி புரபவ
ஸ்ரீமர ஹரசிவ திரள்பவ மொழிவளர்
பாமகள் புகழருட் பாத நமஸ்தே. 11

## 2. திருவருளடிமைப் பிரார்த்தனை

பண்-நட்டபாடை

பொய்யாமுகத் தின்வாழ்விற் புகாதுன்னடி யாருய்
மெய்யாமுகத் தினுக்கேவர மிகுமாவலிங் குள்ளேன்
ஐயாரடிக் கமலந்தொழ லானேனரு ளின்றி
உய்யேனினி யுய்யேன்மயி லூரும்பெரு மானே 1

தண்மாத்தட வாராணசி தனிற்போமுயிர் களுக்கன்
றொண்மாமறை மூலஞ்சொலி யுருவார்கதி நல்கும்
கண்மூன்றுடை யாற்கன்புள கறையில்குரு வான
கண்மாமணி யேயுன்னடி காணாமலுய் யேனே 2

பாலாழியன் சிவபூசனை பண்ணுந்திறற் காழி
சாலூரம தாய்நல்கிய சசிவேணியன் பொருளென்
றாலோலித முளமாமறை யறையுஞ்சிவ னருண்மேல்
மாலாகியு ளேனின்னருள் வாராமலுய் யேனே 3

மூன்றாகிய பிணியாற்பசி முனிவாலின்மைப் பிணியால்
தோன்றாநின்ற வஞர்மேவிட றொழுமாதவர்க் குளதோ
ஈன்றாளுட னீன்றானென விலகுங்கிருபைக் கடலே
தேன்றோடவிழ் தண்ணார்கூச் சிரமாலிகை யோனே 4

சங்காழியு ளாற்கன்றொரு தலைவேதனை யுஞ்சீர்
மங்காமறை யோற்கின்னல்செய் வயின்வேதனை யுந்தான்
தங்காதஞர் புரிந்தூர்ந்ததை யங்காண்டமுஞ் சாற்றும்
நுன்காலடி யார்க்காமய நுழையாதயி லோனே 5

தவநீடுவி யாதன்சகோ தரர்சண்முனி களுமீன்
பவமாறியு னடியேகதி பதியேயெனு மந்நாள்
சிவமானதை யுறுமுன்னருள் சேரும்படி செய்தாய்
நமபேதமு ளான்முன்னிச நவிலும் பெரு மானே 6

நுன்காலடி தாழ்ந்தேத்திவ னுகர்சூர்தடி யாயேல்
எங்கேயினி யுய்வானுன திதமாமரு ளிதுவோ
கொங்கார்மலர் புனையுஞ்சுரர் கோமான்பணி கொண்ட
செங்காவிரி பாயும்பொழிற் சீகாழியன் மகனே. 7

ஏரார்பழ நிக்கேகவென் றெணுமென்றனை யிதுநாள்
வாராதிரு வாராயென வருள்வேமன்று வருவாய்
கூராய்விய சனமென்றன்று கூறிச்சென்ற வணமே
ஆராரரு ளென்றோவரு மயில்வேன் முருகோனே 8

கண்ணாலிருந் துந்தன்முகங் காணத்தகு மோகேழ்க்
கண்ணாடியி னாலேயது காணத்தகு மது போல்
தன்னாருமுன் னருளாலுயிர் தனைநானறி யாதே
பண்ணாநிற்ப தொன்றும்மிலை பரனே குருபரனே 9

தன்னையறி வேனேற்கொளுன் றன்னையறி வேனின்
றென்னையறி யாதேயினிச் செயுமாறென நொடியாய்
மன்னேமயி லேறுங்குரு மணியே கிரி புகழ்ந்த
அன்னேயெனை யாளுந்திரு வருளேதிரு வருளே. 10

## 3. அருண் மாட்சிமை

### பண்-நட்டராகம்

ஆறொண் கங்கைபுனை யரனாருடை வான்பொருளே
ஊரும் பொன்மயிலில் வந் தொளிர்சிவ ரத்தினமே
தேருந் தொன்மறையின் பொருள் சேரருண் முத்தே நின்
காருண் யம்மிலையேற் கணைப் போதினி யுய்யேனே. 1

விண்ணா டுய்பவர்கள் விரை வெண்மல ராற்புசிதம்
பண்ணா நின்றவுன்றன் றிருப் பாதம் வழிபடுவோர்
நண்ணார் சன்மவுவ ரயி னாயக னேயுனருட்
கண்ணோக் கில்லையெனிற் கணைப் போதினி யுய்யேனே. 2

விண்ணோர் தம்பதியே மிளிர் விண்மணி யின்மணியே
அண்ணா வென்னுயிரே யறு மாமுக ரத்தினமே
பண்ணார் பொக்கிஷமே யெங்கள் பாக்கிய வைப்பே நின்
தண்ணீ ரம்மிலையேற் சணப் போதினி யுய்யேனே. 3

பூக்கும் வெண்பொடிதான் மிகப் பொலிசெம் மேனியனே
தூக்கங் குண்டலங்க டுணி துதைய வெண்டிசையும்
தேக்கச் சாரிவருஞ் சிகித் தேருடை யண்ணாவுன்
நோக்கொன் றில்லையெனி னொடிப் போதினி யுய்யேனே. 4

மின்னார் வேற்படையாய் விரை வீசுநற் றண்கதம்பா
பொன்னேர் கொள்சிலம்பா புரி மூன்றுடைப் பொன்மார்பா
மன்னார் தெய்வானை வள்ளி மாணிக்க மேயுனருள்
இன்னே யில்லையெனி னிமைப் போதினி யுய்யேனே 5

நல்லார் போற்றுசிதஞ் செறி நாவிலெழும் பொருளே
பொல்லா நித்திலமே புரை போகா ரத்தினமே
கல்லா வெற்கருள வந்த கண்மணி யேயுனருள்
இல்லா தேயொழியி னிமைப் போதினி யுய்யேனே 6

ஐயங் கோள்கடியப் பன்னு மாரண வாரியனே
தெய்வங் கட்கரிய வொரு தெய்வமே சின்மயமே
பையார் கோபதியே பர பாவகி யேயருணீ
செய்யா யேலிங்கியான் றினைப் போதினி யுய்யேனே 7

பொய்யா வாழ்வுடையாய் புர மூன்றெரித் தோர்புதல்வா
ஐயார் தென்பொதியப் பதி யமர்மு னிக்கினிய
மெய்யா பொன்பழநித் துரை வேலா வெற்கினருள்
செய்யா யேலிங்கியான் றினைப் போதினி யுய்யேனே 8

இன்பார் சாகரமே யென தின்ப மனோரதமே
பொன்பூ மேனியனே பரி பூரண வானவனே
என்பூ சைச்சிவனே வெயி லேறயிற் கையாவுன்
அன்பே யில்லையெனி னணுப் போதினி யுய்யேனே 9

வாளா ரக்ஷியெழில் வளர் வள்ளி மனோகரமே
நீளா திக்கமெனுஞ் சிவ நேசகிர் பாகரமே
கோளீ னங்குறுகாப் புகழ் கூறின வன்பரனே
ஆளா தேபோனா லணுப் போதினி யுய்யனே. 10

## 4. துக்கரகித பிரார்த்தனை
### பண்-பழம்பஞ்சுரம்

முந்நா னயனா முந்நா லரியா மொழிசேர் மறை நாவா
இன்னா வனுகா விறைவா குரவா விறையோர் பணி பாதா
மன்னார் மயிலில் வருமா பாலா மடியா வாழ்வாளா
அன்னே யயனே யெனுமென் கவலை யறநீ யருள்வாய் 1

ஒழியா விசதப் பொடியாய் பொடியா வுரையார் பொற்கழலாய்
பழிசேர் சிதடத் தனுவோர் பகைஞா பகல்சேர் வேற்கையா
பொழிலார் பழநிப் பதியாய் நிதியாய் புனிதா மாப் பொறையா
அழியா மொழியா வென்றன் கவலை யறநீ யருள்வாயே 2

சொல்லுஞ் சுருதிப் பொருளே யருளே சுடர்சேர் மெய்ம் மெய்யா
செல்வங் கட்குயர் செல்வக் கயிலைச் சிவமே செவ்வேளே
நல்லந் திகழுங் கேதா ரமிசை நடனஞ் செய்யேறே
அல்லும் பகலும் படுமென் கவலை யறநீ யருள்வாயே 3

மாலும் விதியும் பரவுஞ் சரணா வளர்சங் கப்புலவா
வேலுங் குளிரு மிளர்செங் கையா விரையா ரணிமார்பா
சேலும் வசியு நானுங் கணினாள் சேயா தண்ணளியா
ஆலுந் தனையா வென்றன் கவலை யறநீ யருள்வாயே 4

முத்தே மணியே முழுமா நிதியே முதிரா யௌவனமே
சத்தே ரசமே தனியின் னமுதே தவமே தவப்பேறே
வித்தே முளையே முளையுள் ளுயிரே விபுவாய் விரிசோதீ
அத்தா வயில்வே லவனே கவலை யறநீ யருள்வாயே 5

தாதா நீபத் தொடரா குமரா சரணா யுதத்துவசா
போதார் முடியா புனிதா தனியா புயமுந் நாலீசா
வேதா வடிதாழ் விமலா சபலா மிறலார் வேளாளா
ஆதா ரவையா வென்றன் கவலை யறநீ யருள்வாயே 6

புனலார் கங்கைக் கிடையோர் புதல்வா பொன்னார் கண்ணாளா
எனையா டண்டைச் சரணா புரணா விகல்சேர் சகநாதா
தினைசேர் குன்றக் குறமா னினியைச் சேரும் பவுள்சாளா
அனலார் மெய்யா வென்றன் கவலை யறநீ யருள்வாயே 7

முட்டா வாட்டா மொழியா நாத்தே முடியாச் சிவலோகா
கட்டா ரறிஞா கருதா மனசா கருணா கரவேலா
எட்டா நிலையா விறையோர் தலைவா விருளெல் லில்லாதோய்
அட்டா வடிவா வென்றன் கவலை யறநீ யருள்வாயே 8

எஞ்சா வடியார் தொடர்பா வடல்சே ரிறைவா சட்கிரீவா
துஞ்சா வெழிற்கே சயமூர் குழகா சுகிர்தா சுயஞ்சோதீ
பஞ்சா ரடிச்சேல் விழியா டனயா பரிபூ ரணபாதா
அஞ்சா விறலோ யென்றன் கவலை யறநீ யருள்வாயே 9

விண்ணா டுறைநா ரதனா சிரியா வியன்வா ருணியீசா
மண்ணார் முசுமன் னனையாள் சிவனே மதியீ புண்ணியனே
பண்ணார் புகழ்பா டினவன் பதியே பரனார் குருநாதா
அண்ணா வடிபே ணியவென் கவலை யறநீ யருள்வாயே 10

## 5. ஆறெழுத்துண்மை

பண்-காந்தார பஞ்சமம்

அற்புத மாகிய வருமறை மொழிபோல்
வெற்புயர் புவனம்பல் விளங்கிடு மாறு
பற்பல தேவர்கள் படர்ந்தவிண் ணுறினும்
தற்பர மாவது சரவண பவவே. 1

பத்தியு ஞானமும் பரவிடு மார்க்கம்
எத்தனை யோவகை யிருக்கினு மிகத்தில்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே 2

பூசிக்கும் வானவர் புரவல னாவி
வாசிக்கு மாவடி வழிப்படி னென்றும்
பாசத்தை நசித்திவண் பரப்பிரம வாழ்வைத்
தாசர்பங் காக்கிடுஞ் சரவண பவவே 3

அருணலை முள்ளவ னாதிமுன் னுள்ளான்
பொருணலை முள்ளவன் பூசித வடியார்க்
கிருணில மெய்தினு மிதமுட னேயத்
தருணத்திற் காப்பது சரவண பவவே 4

பொடிபொலி மேனியன் புரண வியோம
வடிவுடை யயிலுடை மனனடி கைகூப்
படியவர்க் கிடுக்கணிவ் வவனியிற் குறுகின்
சடிதியிற் றடுப்பது சரவண பவவே 5

மஞ்சிகைச் செவியோன் மயிற்பரி யூர்வோன்
தஞ்சமென் றவர்க்கரு டருசம ரூரான்
செஞ்சரண் வாழ்த்துநர் திருவடி சேர்வார்
சஞ்சலந் தவிர்ப்பது சரவண பவவே 6

பொங்கிடு புனலிலம் பூவில் வெங் கனலில்
எங்கணு முளவெளி யில்வளி பகலிற்
கங்குலி லடியவர் கருத்துநன் காகச்
சங்கடந் தீர்ப்பது சரவண பவவே 7

தென்றிசைக் கோன்விடு திரிவிதத் தூதர்
குன்றெனும் புயமலை குலுங்கமுக் குடுமி
வென்றிகொள் கடந்தடி வீசிவெம் பிடினும்
தன்றுணை யாவது சரவண பவவே 8

தேவியுந் தேவனுந் திருவுரு வருவம்
மேவி யனாதியாய் மிளிர்தல்சண் முகமென்
றாவலுற் றுணர்பவ ரழிவுறா வண்ணஞ்
சாவினைத் தடுப்பது சரவண பவவே 9

இந்திரன் முனிவர்க ளேத்துபொற் சரணான்
செந்திரு நகரிடஞ் சேர்ந்ததில் வாழ
அந்திருப் புகழ்பா டினவருக் கபயம்
தந்ததைத் தருவது சரவண பவவே 10

### 6. திருப்பரங்கிரி
பண்-பஞ்சமம்

எந்தையே யிறையே யிணையரு ளிலையே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிந்தைசேர் வானே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே

பந்தமே போக்கிப் பதவரு ளாக்கிப்
பகலிர வணவிடா நிலையிற்
சந்ததஞ் சேர்க்கத் தயவுசெய் யாயோ
சரவண சுயம்பெரு மாளே 1

இட்டமா மருடா னில்லையே யாயி
னிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிட்டர்பா லனனே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
கட்டுமா ணவமாங் கயிற்றினை யறுத்தென்
கவலையின் றிறங்கடி யாயோ
மட்டிலா வகுப்பை யுரைத்தவ னிறைவா
மதியயிற் சுயம்பெரு மாளே. 10

## 7. திருச்சீரலைவாய்

பண்-பஞ்சமம்

பனியருட் சேஷா பவளசெவ் வாயா
பச்சைமா லயன்பணி பாதா
புனித குணாளா புகழ்பவர் தோழா
பொன்றிடா வண்டர்தம் பரனே
எனைமறக் காதிங் கருளிசைப் பவனே
யெழிற்செழுஞ் சீரலை வாயா
தனிநிலைச் சுகனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே 1

நண்ணுவா ருறவே யெண்ணுவா ரிறையே
நான்மறை முடிவிற்சொல் பொருளே
மண்ணும்வா னகமும் பண்ணுமாள் வினைஞா
மட்டிலா நடனவெம் பரனே
உண்ணும்வா னமுதே கன்னலா ரிமுதே
யுயர்நிலைச் சீரலை வாயா
தண்ணமார் சரணா வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே 2

பவமழிப் பவனே சிவமளிப் பவனே
பரிவுடைத் துவிநவ நயனா
நவமொழிப் புகழ்பாச் சொலினவர்க் கிறையே
நச்சினார்க் கினியவெம் பரனே
உவமையிற் படியா வடிவுடைத் திருவே
யுறைநிலைச் சீரலை வாயா
தவவருட் சனகா வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. 10

## 8. பலகிரி

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)
பண்-பஞ்சமம்

கனைகழ னிலவிடு சததள விணையடி கருதிடு தவமுடையோர்
மனவெளி தனினட மிடுமர ஹரசிவ வடிவுடை யயிலரசே
பனிமலி யிதழவிழ் தொடைய லணிபெரும பலகிரி
யுறைமுருகா
இனிமைசெய் புரிவுட னெனையுமடிமை கொள விதுநல
-தருணமரோ 1

அருமறை புகழ்நிறை குருபர மிதுவெனு மமைவொடு
தினமுணர்வாய்ச்
சரவண பவகுக வெனவழி படுபவர் சனன மரணமறவே
பரிவுட னடிமைகொ ளகணித பசுபதி பலகிரி யுறைமுருகா
இருசுறு புரிவுடனெனையு மடிமைகொள விதுநல தருணமரோ
3

முரணறு புகழ்சொன வருண கிரியைநிஜ முடிபுடை
யறிஞனெனத்
தரணிய ருவணையர் புகழ வருளினவொர் தகரவெ
ளியிறைவனே
பரவரு நெடுவள மலிய முகில்கள்கவி பலகிரியுறை முருகா
இரிபறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ
10

## 9. திருப்பழநி

பண்-நட்டராகம்

சிங்கா நன்குதவுந் திருவாறெ ழுத்தாளா
கங்கா ளன்குருவே நினை யேக ருத்தில் வைத்தேன்
மங்கா வாழ்வுடையா யெனை வாவென் றேயழையாய்
தெங்கார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 1

எல்லா ருந்தொழுது நல மேற்க வென்றிலறம்
இல்லா மாதுறவா யில காறெ ழுத்திறைவா
வல்லார் வானவனே யெனை வாவென் றேயழையாய்
செல்வா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 2

நாயே னுய்யவென்று நவில் வேன்வ ருகவென்று
நேயா நீவரலா நிஜமா நம் பென்று சொன்ன
வாயா வெம்பரனே யெனை வாவென் றேயழையாய்
சீயார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 3

என்னா வின்றுதியை யினி தேற்றெ னக்காக
நன்னா வையசைத்து நல மேயு ரைத் தெனையாள்
மன்னார் சின்மயனே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 4

சூடே னின்னடியை யன்றித் துதித்து நானெதையும்
பாடே னெம்மானே பர மார்த்த சன்யாசீ
வாடா விண்மலரே யெனை வாவென் றேயழையாய்
சேடார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 5

தந்தார் சித்தர்களுந் தனி ஞான விற்பனரும்
வந்தே தாள்பணிய நிற்கும் வரத மாமுனியே
மந்தா ரத்திருவே யெனை வாவென் றேயழையாய்
செந்தார்த் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 6

மின்னார் கௌபீனந் தனை வீக்கி மஞ்சழகார்
சன்னா சக்குருப்போற் றனி யாக நிற்குமருள்
மன்னே மாமுனியே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 7

நானா சாதிகுல முரு நாமம் பாராமல்
ஊனார் சீவனெலா மரு ளுயிரென் றேமதிக்கும்
வானோர் தேசிகனே யெனை வாவென் றேயழையாய்
தேனார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 8

சத்தா நீறணிந்து கையிற் றண்ட மொன்றுடைய
கத்தா வாயெவர்க்கும் பரகதி நல்கைய பது
மத்தார் பூணழகா வெனை வாவென் றேயழையாய்
சித்தா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 9

மண்ணார் சீவனெலா மினு மாண்டெ டூாதவகை
பண்ணா நிற்குமருட் பர மேயண் ணாமலையான்
அண்ணா வென்னுயிரே யெனை வாவென் றேயழையாய்
தெண்ணார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 10

## 10. அடிமை

### எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பண்-புறநீர்மை

கற்றவர் தொடுத்துக் கனிவுடன் சூட்டுங்
கவித்தொடை யேற்றெழின் மறைதான்
சொற்றிடு கதியை வழங்கருண் மாவின்
சோதியே சொலற்கருஞ் சுடரே
இற்றைநா ளுன்காற் போதினை யேத்தற்
கெனதவஞ் செய்திருந் தேனோ
அற்றையெற் கதிர்த்த வணமருள் வானே
யப்பனே யொப்பிலா தவனே. 1

பேயினுங் கடையேன் பிணத்தினுந் தீழ்ப்பேன்
பிறங்குநற் குணமெது மில்லேன்
நாயினுங் கடையே னலனுற வெனநீ
நறுநெறி குயிற்றிய வருளாம்
நேயநல் வரவுக் கொருகர மாறிந்
நெடுநிலப் பரப்பிடை யுண்டோ
ஆயுத வயில்வேற் குருபர வெனையா
ளப்பனே யொப்பிலா தவனே. 3

உன்னெறி துறந்தே யுன்னடி மறந்தே
யுனுற்றிடு பெரும்படர்த் தீமை
தன்னையுந் துறந்தே தன்னையு மறந்தே
தன்னையு மறந்துய்யு மாறால்
என்னைநீ கலந்தா ளெம்பெரு மானே
யிணையறு மாசிலா மணியே
அன்னையே யருள்சா லறுமுகச் சிவனே
யப்பனே யொப்பிலா தவனே. 4

தாளிணைப் பழிச்சு மேழையே னின்றே
சாகினுஞ் சாகுக வினியெந்
நாளுமிங் கிருக்கினு மிருக்குக சுவர்க்கமோ
நரகமோ சேரினுஞ் சேர்க
கோளுறு பிறப்பே யாயினு மாகுக
குறைவறு நின்சரண் மறவா
ஆள்வினை யொன்றை யளித்தருள் யாண்டு
மப்பனே யொப்பிலா தவனே. 7

மாயமா மளக்கர் வாழ்வினி லுழலு
மடனெனைத் தடுத்தருள் வணநீ
நேயமுற் றிடினிங் கெனகுறை யெனக்கா
நெறியிதன் மேலெது வருள்கூர்
வேயுறு தோளங் கயற்கணி மதலாய்
விரதர்கள் குருமணி பதினா
றாயிரம் புகழ்ப்பாப் படித்தவற் கருளிய
வப்பனே யொப்பிலா தவனே. 10

## 11. திருநெல்வேலிக் கோவில்

### பண்-நட்டராகம்

சீருடை யாரியனே யெனைச் சேர வணைப்பவனே
ஏருடை வானவர்க ணித மேத்தும் பராபரனே
ஆருடை வேலவனே நெல்லை யப்பர் விமானமுறை
நாருடை யோமயனே யென்ற னாட்டத்தைப் பூர்த்திசெய்யே
1

கச்சணி மாமுகையாள் குறக் காரிகை காவலனே
சொச்சமெய் யோகருளத் தனிற் சொந்தப்பட் டுள்ளவனே
அச்சமில் சிற்பரனே நெல்லை யப்பர் விமானமுறை
எச்சமி லெம்பரனே யென தெண்ணத்தைப் பூர்த்திசெய்யே 2

ஏத்தி யிறைஞ்சுபவர் மிகை யேக வருள்பவனே
கோத்திர மற்றவனே குணக் கூறினை கூறவொண்ணா
ஆத்தும நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
ஊத்தையில் சேயவனே யென துள்ளத்தைப் பூர்த்திசெய்யே 3

உம்பரைத் தொண்டு கொளுங் கனவுத்திப் பெருக்குடையாய்
எம்பெரு மானெனவே நித மேத்துநர் பங்குடையாய்
அம்பர வேதியனே நெல்லை யப்பர் விமானமுறை
செம்பர வேலுடையா யென்றன் சிந்தையைப் பூர்த்திசெய்யே 4

கங்கையுங் கொன்றையு மார் கிடைக்கண்ணுத லானவொரு
சங்கர னார்குமரா வந்தச் சங்கர னாரிறைவா
அங்கத மற்றவனே நெல்லை யப்பர் விமானமுறை
புங்கவ னேகுகனே யென்றன் புந்தியைப் பூர்த்திசெய்யே 5

கான மலர்க்குழலி தெய்வ குஞ்சரி காவலனே
தானவர் மாபுரியைச் சல ராசியான் மூடிவிண்ணோர்
ஆனவர்க் காக்கமிட்டோய் நெல்லை யப்பர் விமானமுறை
நானமில் வேதியனே யென்றன் நோக்கத்தைப் பூர்த்திசெய்யே 6

பத்தருட் புத்தமுதே யெங்கள் பாக்கியப் பொக்கிஷமே
சித்தெனுஞ் சத்திதனை யொருதுண்டத்திற் சேர்த்துளனே
அத்தனே யற்புதனே நெல்லை யப்பர் விமானமுறை
நித்தனே சண்முகனே யென்ற னெஞ்சத்தைப் பூர்த்திசெய்யே 7

பூவளங் கொண்டொழுகச் சிவ புண்ணியத் தான்றழைக்கத்
தாவற வேதினமு நல்ல தாம்பிர வன்னியெனும்
ஆவகை தான்பெருகு நெல்லை யப்பர் விமானமுறை
வீவி லயிற்கரனே யென்றன் வேண்டலைப் பூர்த்திசெய்யே 8

சந்ததம் வந்திப்பவர் பத்திச் சாலத்திற் சிக்கிக்கொளுஞ்
செந்திரு வன்புடையா யுமை செல்வச் செழும்பொருளே
அந்தரர் நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
நந்தலி லெம்பெருமா னென்றன் ஞானத்தைப் பூர்த்திசெய்யே 9

சங்கையி லுன்புகழைத் தினஞ் சாற்றிய வெந்தைபிரான்
இங்கெனை யுய்வித்தவ ருனை யன்றி யெவருளரால்
அங்கியின் மேனியனே நெல்லை யப்பர் விமானமுறை
பங்கமி லாயெனது வழி பாட்டினைப் பூர்த்திசெய்யே. 10

## 12. தாசப்பிரகாசம்

பண்-கொல்லிக் கௌவாணம்

பொன் மருவு பொடிமேனிப் புலவற்குத் தாசன்
புகரற்ற நறுநீபம் புனைவோற்குத் தாசன்
தென்மலய மாமுனிவன் குரவற்குத் தாசன்
செழுந்தூவி மயிலூருஞ் சிவனுக்குத் தாசன்
கன்மவினை போக்கியருள் கந்தற்குத் தாசன்
காங்கேயத் திருநாமக் கடவுட்குத் தாசன்
என்மனதி லுள்ளவயி லிறைவற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னானே.

## 13. பரமப் பிரகாசம்

பண்-பழம் பஞ்சுரம் பண்-கொல்லி

கங்கை சூடிறை புதல்வ ரோகன கந்த மாதன வீசரோ
அங்க மாறுடை யைய ரோதுடிக் கைய ரோவெறி சூலமே
செங்கை மீதணி தேவ ரோசிவை செல்வ ரோசுர குஞ்சரி
பங்க ரோவா துங்க ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே 1

வேரி கொண்ட கடம்ப ரோகுற மின்னி டஞ்செ லிடம்பரோ
வாரி யுண்டவர் குரவ ரோபவ னிறைவ ரோவறு மங்கைமார்
பீரை யுண்ட புனித ரோவடி பேணு மன்பர்க ளன்பரோ
பார ருந்தவ ரரைய ரோநமை யடிமை கொய்டவொர் பரமேர 2

பிறப்பி லாதவொர் பெரிய ரோபெரி யார்ப ழிச்சிட வுரியரோ
இறப்பி லாதவொ ரிறைவ ரோவது விதுலெ னச்சொல
விசையுமோர்
குறிப்பி லாதவொர் நிலைய ரோவறு குணப ராபர வருளரோ
பறப்பி லாதவொர் முதுவ ரோநமை யடிமை கொண்டவொர்
பரமரே 9

ஏசி லாத சுரேச ரோசக தீச ரோபர மேசரோ
காசி லாவரு ளாள ரோவுழல் கான டாத்தொரு ஞ்ரரோ
ஆசி லாவரு ணாச லப்பெய ரானி னைந்த குகேசரோ
பாச மாமல நாச ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.
10

## 14. துயரறுக்கு மார்க்க விளக்கம்
### பண்-நட்டராகம்

மணிம தாணி மார்பினர் மாசில் பரசுப் படையினர்
திணிம யூர வாகனர் சீத மேய நீபவீ
அணிவி சாகர் சேவடி யடைவ தேமெய் வீடெனாப்
பணிவி வேகர் தூவடி பரவச் சூர்கள் பாறுமே. 1

நாத கீதப் பிரியர்மெயஞ் ஞான யோகத் திருவினர்
பூத நாதர் பொருவிலாப் பூதி திமிரு மேனியர்
வேத நீதர் வேய்ங்குழ லூது வாயர் வேலவர்
பாத நாடு வோரடி பரவச் சூர்கள் பாறுமே. 2

எண்ணு வார்க ணெஞ்சுணர்ந் தருளு மீடிலிருதய
அண்ண லேயென் றேத்துநர்க் கைய ராகு முருகவேள்
கண்ணி னாட்ட நிமிரவே கருதி ஞான யோகமே
பண்ணு வோர்கள் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 3

ஈச னேசு ரேசனே யெனுநர்க் கின்பு பொழியவே
மூசு கருணை மேகமா முதல னாதி முருகவேள்
தாச ராயிவ் வுலகிலே சார்பி லாது திரிதரு
பாச நாசர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே 4

சீல யோகர் செல்வமாஞ் செல்வம் யாவு நல்கருட்
கோல மேநன் மேனியாக் கொண்டு லாவு குமரவேள்
காலை நம்பி விடயவெங் கனலி யாற்றின் மேன்மயிர்ப்
பால ஞான நிற்குநர் பரவச் சூர்கள் பாறுமே. 5

தீங்கு றாத சேடுடைத் செந்தி னாத ரருள்கொடு
வீங்க லின்றி வீங்கிடும் விமல யோக நிலையிலே
ஓங்கு சின்முத் திரையினா லொன்றி ரண்டெ னாதநல்
பாங்கி னோர்தம் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 6

அந்த மாதி நடுவிலா வமல ஞான மயசிவா
நந்தசரவ ணபவவே ணாம மந்த்ர மோதியே
கந்த மாதி யைந்தையுங் கடியும் வன்மை யொடுநெடும்
பந்த் நீத்து ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. 7

சடில நாத ராஞ்சிவ சம்பு நன்கு நவின்றவா
நெடிய வேலி னிறைவரை நிமல னாநி னைந்துமா
கொடிய நெஞ்சை யொருமுகங் கூட்டி நினைவு கூர்ந்துகோட்
படிற கன்று ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. 8

சுகுர்த ஞான தேசிகா சூர நாச காமகா
சிகியி ராச வோஞ்சிவ சிவசி வசிவ சிவசிவோம்
குககு கருக ஹரஹர குமர குருப ரவெனவே
பகரு மன்பர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 9

தீஞ்சொ லருண கிரிசதா சிந்தை செய்ச டானனா
ஓம்ச ரவண பவநம வோஞ்சி வாய நமகுகா
ஓம்ச ரவண குருபரா வோந மோந மவெனுமின்
பாஞ்சு சீலர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. 10

## 15. திருப்போரூர்

### பண்-சீகாமரம்

சொல்வி லாசம றாத நான்மறை
தூய சோதியென் றோது மாகதி
நல்கி யாளவெனு ணட மாட வாவரிய
கல்வி கேள்வியி னால வாவலி
காதி மேலடி பாடு மாதமிழ்ச்
செல்வர் நாயகனே திருப் போரூ ரம்மானே. 1

மூவர் சூழ்முத லாய வோர்சிவன்
மூல வோமுரு கோனென் றானதை
யாவர் தாமறிவா ரடி யார லாமலுயர்
நாவர் பாடுன தேசி லாவடி
ஞானமீகுதி கானல் வேலவ
தேவர் நாயகனே திருப் போரூ ரம்மானே. 2

பாட்டி லேபுக ழேழை யேன்மிடி
பாற வோரருள் கூர்தி மாமலை
ஆட்டி காதலனே யற வோர்சி காமணியே
நாட்டு மூடரு மாரி போலிசை
பாட வேயவர் நாவி லேவரி
தீட்டு நாயகனே திருப் போரூ ரம்மானே. 3

கருப்பு காநிலை கூட வேயிரு
காலை யேகரு தேழை யேனொரு
விருப்பு மேன்மையுற விரை யார்ப தந்தாராய்
இருப்பு மாதவ ரீச னேகும
ரேச னேயடி சேரு மாறுயிர்
திருப்பு நாயகனே திருப் போரூ ரம்மானே. 4

மாண்டு சூதக மேவு பாசறை
மாற வேநினை யேழை யேனனி
வேண்டு மீசுரனே விரை யார்ப தந்தாராய்
ஆண்டு சேர்மதி வார மோரையி
லாத பூரண வாசி லாவுயிர்
தீண்டு நாயகனே திருப் போரூ ரம்மானே. 5

சீரு லாமடி சேர வேயரு
டேவ னேயெனு மேழை யேனுளம்
ஓரு மீசுரனே யெனக் கோகை யோடருளாய்
ஏரு லாமயி லீச கானவ
ரேழை பூவணி யேறு தோளது
சேரு நாயகனே திருப் போரூ ரம்மானே. 6

புருட னானதுன் பால தாகவெ
னானி னைந்திடு போத னேனகக்
குருடு தானறவே யருள் கூரி ளங்கோவே

முருட ரூரிடை யோரி ராவெழின்
　　மூல நாயக மான மானினைத்
திருடு நாயகனே திருப் போரூ ரம்மானே. 7

குறுக்க நீடலி லாவு னேரருள்
　　கோட லேகதி யாமெ னாநினை
சிறுக்க னேனைவிடா தடி சேரி ளங்கோவே
நறுக்கொ ணாவுர னால றாவயி
　　னாத காவென வோது வார்வினை
செறுக்கு நாயகனே திருப் போரூ ரம்மானே. 8

நீர்க்கு ளேதிரி வாளை பாய்விரி
　　தாழை நீள்கமு கோதி சூழ்வளம்
ஆர்க்கும் வேதகிரி யர னார்தி ருச்சேயே
பார்க்கு ளேதிரி யேழை யேன்வினை
　　பாற வேயருள் பாடு வார்துயர்
தீர்க்கு நாயகனே திருப் போரூ ரம்மானே. 9

பொய்த வாவுரை யேனை மேனிலை
　　போக வேயருள் கூர்தென் மாகவி
பெய்த ஞானவெளிப் பெய ரானு ளத்தேவே
பைத லாலிரு தேவர் தேடிய
　　பார மாதிரப் பேரன் மாதுதி
செய்த நாயகனே திருப் போரூ ரம்மானே. 10

## 16. கழுகுமலை பாதி கந்தமலை பாதி

கலிவிருத்தம் தக்கராகம் பண்-கொல்லி கௌவாணம்

உலகவெம்மைக் கடல்கடக்கு முறுதியினைத் தாராய்
கலகமிகந் தவர்கருதுங் கழுகுமலை முருகா
விலகலற்ற விருத்தியெற்கு விரைவிலினி தளியாய்
பலகவிஞர் பரசுகந்த பருவதத்துப் பரமே. 1

வருதாவெல் லாங்களைதி மனதினினைப் போர்க்கும்
கருதார்க்குங் களிப்புதவுங் கழுகுமலை முருகா
ஒருதாழ்வுஞ் சொலவிசையா வுவப்பிலெனை வையாய்
இருதார்த்த ருள்குகந்த கிரியிருக்குங் கிளியே. 2

அன்றுசொன்ன படியெனைவந் தாண்டுகொள வேண்டும்
கன்றுதலில் லார்குரங்குங் கழுகுமலை முருகா
என்றுமெனைத் திருவடிக்க ணிருத்தியிட வேண்டும்
குன்றுதலில் லாதகந்த குவடமருங் குருந்தே. 3

தாட்டாம ரைத்திருவிற் றங்கவெனை வையாய்
காட்டார்வ முனிவருள்குங் கழுகுமலை முருகா
வீட்டாசை யேற்கொளுதி விரைவினில்வல் லார்க்கும்
மாட்டார்க்கு நல்லகந்த மலையிருக்கு மணியே. 4

நாதநிலை ஞாங்கரெனை நன்கிருத்தி யாளாய்
காதலொடு நானேத்துங் கழுகுமலை முருகா
பாதகமெல் லாமுருக்கும் பரிவிலெனை வையாய்
மாதவர்கள் வணங்குகந்த மலையிருக்கு மணியே. 5

எள்ளுதலில் லாநெறியி லெனையிருத்தி யருளாய்
கள்ளுதலுள் ளார்மறந்த கழுகுமலை முருகா
துள்ளுதலில் லாதமதி துலங்கவெனக் களியாய்
பொள்ளுதல்கொள் ளாதகந்த பொருப்பிருக்கும் பொருளே. 6

திடம்பிறங்கு தெருளிலெனைத் தினமுநனி வையாய்
கடம்புமலர் கமழ்வளங்கொள் கழுகுமலை முருகா
விடம்பொருவென் மலமவித்துன் விரையடியைத் தாராய்
தடம்பொழில்கொள் கந்தகிரி தனிலிருக்குந் தகையே. 7

நான்பாடு பாட்டைநவில் பவர்க்குநல நல்காய்
கான்பாடு வண்டறையுங் கழுகுமலை முருகா
தேன்பாகு கண்டெனவந் தென்னுணணி சேராய்
மேன்பாடு மல்குகந்த வெற்பிருக்கும் வேளே. 8

எனைத்தள்ளி னாலுமெனை நம்பினவர்த் தள்ளேல்
கனைத்தண்டை சிலம்பவருங் கழுகுமலை முருகா
தினைத்தனையு நீங்காத திருவிலெனை வையாய்
நினைத்தவர நல்குகந்த கிரிக்கருணை நிதியே. 9

குருப்புகழர் விரும்புமருட் கூத்தினென்னை யாட்டாய்
கருப்புகழர் காணரிய கழுகுமலை முருகா
அருப்புகழர் நாடறிவி லனவரத மெனைவை
திருப்புகழர் புகழ்ந்தகந்த சிகரியுறை சிவமே. 10

## 17. திருக்கந்தர் திருப்பல்லாண்டு

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம் பண்-பஞ்சமம்

பொன்னுயர் நாட்டிறை புத்திரி தனைமன்றல் புரிந்துசெந்
தினைகாத்த
மின்னினை மாமணஞ் செய்தரு ணாடிய வித்தகர்
தமையாண்டு
நன்னல நல்கருள் வேந்தென விளங்குபு நான்மறை
களும்விரித்துப்
பன்னரும் பரமென விருக்குநந் தேவுக்குப் பல்லாண்டு
கூறுதுமே. 1

மூப்பறு கட்டிள மைத்திரு மேனியு மூப்புடை யார்க்கெல்லாம்
மூப்புடை மேன்மையு மூப்புடை யாவிகண் முழுவது
மூப்பிளமை
யாப்பறு மாறெமை யாளகும ராவென நாடிறை மையுமல்கு
பாப்பனை யான்மரு மானெனும் வேலற்குப் பல்லாண்டு
கூறுதுமே. 2

நீர்வள மார்பரங் குன்றிலு நீடெழி னிமிர்திருச் செந்திலிலும்
சீர்வள மார்திரு வேரகந் தன்னிலுந் தீதறு பழநியிலும்
ஏர்வள மார்திருச் சோலையங் கிரியிலு மிருந்தடி
நினைவார்க்குப்
பார்வள மேல்வள நல்கருட் குகனுக்குப் பல்லாண்டு
கூறுதுமே. 3

தணிகைகந் தாசலஞ் சமரா புரிதிருச் சயிலமி லஞ்சியறா
அணிகெழு வேள்வியங் கிரிபொதி யாசல மரிப்பா
டுடுப்பைமகா
திணியகத் தேவைசெங் கோடுகுன் றக்குடி திருவுரு மலையாரூர்
பணியுயர் கூடலம் பதியுறை குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே
4

சித்தர்கள் காண்கதிர் காமமண் ணாமலை சீசயி லங்கயிலை
எத்தவ ரும்புகழ் மேரு சிராசல மேர்த்திரு நீற்றுமலை

உத்தம நீள்கழு கோதியென் கண்ணெனு
மொண்டலங்களின்மேவிப்
பத்தருக் கருள்புரி கின்றசெவ் வேளுக்குப் பல்லாண்டு
கூறுதுமே. 5

நேசர்கள் வாமெழுழின் மயிலவொண் மாதிர நீர்மலி பெரும்பேறு
கோசரார் சூழ்கந்த கோட்டங் குமாரவொண் கோட்டநல் வேற்காடு
மாசில்கு மாரபு ரம்பெரு வயலிரு கொடுமளூர் வதிந்தடியார்
பாசறை தீர்த்தருள் புரிமுரு கோனுக்குப் பல்லாண்டு கூறுதுமே
6

துப்புறு பூண்டிபுள் வேணகர் வேனகர் தூயவர் புகழாண்டார்
குப்பமி றாதபொ னம்பல மெனவே குயினில யங்களிலும்
ஒப்பக நாடுகள் காடுகள் கீழ்மே லுலகுயிர்த் திரள்களிலும்
பப்புவர் மீக்கூ றிடநிறை குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே
7

கட்சியி லேபடுத் துத்துயில் கொண்டிருட் காரியி னுங்கொடிய
அட்சிகண் மோகன மாழ்ந்துள வாயுளை யவம்பணி யவியாமல்
வெட்சியுங் கோடையு மணிதிரு மொய்ம்புகள் விளங்கிட
மென்றூவிப்
பட்சியில் வருமுரு கோனெனு மாதிக்குப் பல்லாண்டு
கூறுதுமே. 8

எண்ணுந ரெண்ணம தோர்ந்தரு ளேந்தலு மிரவொடு
பகலிறந்த
கண்ணர்கள் பின்றொடர் காதலுள் ளானுமொர் காலமு
மிடர்நாசம்
நண்ணுத லில்லுயர் பெருந்திற லோனுமெஞ் ஞாலமு
நினைவொன்றால்
பண்ணிடு மீசனு மாயுள்ள குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 9

அன்னையின் மேம்படு கருணையி னாற்குக னடிகளை புகழ்தாசன்
தன்னைமெய் யடியவ னாக்கவென் றகம்புறந் சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னாயனு பூதிசொன் னவற்குறு சூரறுத் தெவராலும்
பன்னவொ ணாநல நல்கிய குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே
10

உ

குஹப்ரஹ்மணேநம:

திருச்சிற்றம்பலம்

இரண்டாவது மண்டலமாகிய

# திருவலங்கற்றிரட்டு

## பல்சந்தப்பரிமளமாகிய இரண்டாங்கண்டம்

### 1 - ஆவது வெள்ளியல்

பாவம் பொடிக்குமே பத்தியை யீட்டுமே
சாவுந் தொலைக்குமே தாரக-மாவருள்
கூட்டுமே முத்தியைக் கூட்டுடன் காணெனக்
காட்டுமே சண்முகன் கால். 5

### 2 - ஆவது ஆசிரியவியல்

துவம்பத பசுமலந் துமித்துயர் சமாதியில்
அவமிறப் பதப்பதி யடங்குத லசிபதம்
எனப்பகர் மகாமொழிப் படியுறு மிருங்கதி
மனச்சுழ லிறப்பினில் வருமெனல் சரதமத்
திரமதி லெனைவிடச் சிகியிவர்
பிரணவத் திருவுருப் பெரியைநீ யருடியே. 3

கார்த்திகை சட்டிவை காசிவி சாகமுநன் கடிதரு தைப்பூ சமுமா
கீர்த்திசெய் பங்குனி யுத்திர மாசறுசுக் கிரனது வாரங் குகுவை
நீத்தெழு நற்சிவ ராத்திரி யுங்குகனை நெடுவழி பாடு புரிவோர்
பூர்த்திசெய் மெய்யறி வுள்ளவர் சன்னிதியிற் புகுதுவர் வீடெய்
துவரே. 98

3 - ஆவது கலியியல்

கமழ்க டம்பணி பூணறுங் கண்டனே
    கரையில் விண்மண்ணு நிற்கும கண்டனே
இமிழ்சி லம்பணி தாங்கிரு காலனே
    யெவையுந் தந்துபின் வாங்கொரு காலனே
தமிழ்நெ டுங்கவி பாடுநர் நாதனே
    தந்தைக் குங்குரு வானவ நாதனே
அமிழ்த ராசைகொள் பேரின்பக் கட்டியே
    யடிய னேனையு மாணலங் கட்டியே. 37

இப்பா ரெமக்குள்ள வேலையுங் காலமு மெண்ணங்களும்
தப்பாம லின்னுஞ் சிலநாளிற் றீருமச் சந்தர்ப்பமா
துப்பாய முத்தியை நாடுவே மென்பார் துணிபுநரி
உப்பாழி வற்றுமென் றொள்வேலை காத்தலொக் குங்குகனே.
78

பணமலி பாம்புகொள் பரற்கி யாணரென்
மணமலி சேயென வருமெஃ கீசுரா
நிணமலி யாக்கையி னிரம்பிக் கோஒதுண்
குணமலி யாவியென் குறையை நூறியாள். 88

மருணையுறமெய் கருதுமறிஞர் மணமுணடன மிடுகுருபர
கருணையிறைவர் புதல்வபெரிய கலைஞரினிது புகழுறுமுக
அருணைவளரு மருணகிரியி னமலபரம சரவணபவ
இருணைவுறவு னடியைநினையெ னிடர்தொலைவுற
வருடியருடி. 163

உ
சிவமயம்
குஹப்ரஹ்மனே நம:
திருச்சிற்றம்பலம்

# தகராலய ரகசியம்

ஆறுமுகச் சிவபிரான் றுதி
கலிவிருத்தம்

ஏம நாயக னேர்மறை நாயகன்
சேம நாயகன் றேவர்க ணாயகன்
ஆமெந் நாயக னாறு முகச்சிவன்
பூம லர்ச்சரண் போற்றிப் பழிச்சுவாம். 2

கலிவிருத்தம்

இச்சவை யைக்குறி யாநூ லிழைநூல்
மச்சுறு தண்டா மரைநூன் மயிர்நூல்
நச்சுளர் நச்சி டுலண்டா டிடுநூல்
பச்சிலை வாழைப் பலநூ லெனவாம். 38

பொன்னவை யைப்புக ழாவாய் புழுவே
துன்னுடல் சூர்விடு வாய்செய் திடாவாய்
இந்நில மீதிழி வாய்வா யினராற்
பன்னுபல் வாய்பழி வாய்வா யெனவாம். 39

நிருத்தனை யுள்கிந னீர்சொரி யாக்கண்
குருட்டழி கண்ணிழி கண்கோ மடியார்
கருக்கணி டுக்கண் ணுகிர்க்கண் மயிர்க்கண்
பெருக்குநுங் கின்கண் பீலியின் கண்ணே. 40

நடேசனைநீத்த நோன்பு முதலியன
பயன்படா வென்பது.

தாண்டவ னைக்கரு தாதுள சிந்தை
மாண்டலின் மாடடை மந்தை யகந்தை
காண்டக மாவில் கறங்கு பிறந்தை
நீண்டுள நிந்தை யரந்தை யுடந்தை. 41

அண்டமன் றாய வரும்பொதி யுள்ளும்
பிண்டமன் றாய பெரும்பொதி யுள்ளுங்
கண்டவர் துன்பு கடிந்துய வாடுஞ்
சண்டனை நீத்த தவங்களு முளவோ. 42

கரிசறு நூற்பல கற்கினு மதுபோற்
றிரிபற வோது திடம்பெறி னுங்கார்
சொரியுறை போற்கவி சொல்லினும் வெந்நோய்
அரிகுக னைப்பர வாவிடி லவமே. 43

பூவலஞ் செய்யினும் பூவுத கங்கொண்
டாவலொ டர்ச்சனை செய்யினு மசபா
மாவல மந்திர மோதினு மன்றார்
தேவனை யினிதெண் ணாமை யசிவமே. 44

தூயந னீரிடைத் தோயினு மங்ஙன்
ஆயபஃ றான மளிப்பினு மார்வம்
ஏயுயர் விரத மிழைப்பினு ஞானா
காயம தைக்குறு காவிடில் வறிதே. 45

இட்டி யனந்த மிழைக்கினும் பள்ளி
கட்டினு மானமில் கற்பம துண்டோர்
திட்டம தாய்மெய் திருத்தினு மோவா
நட்டனை யுள்ளு ணணாவிடில் வறிதே. 46

மெய்யை வெறுத்து விரத்தி யடைந்து
கையை விரித்தொரு கட்டைய தென்ன
மையடர் கானி லிருப்பினு மன்றா
டையனை நாடி யுனாவிடி லவமே. 47

## தோத்திரவியல்

சீடன்செய் தோத்திரமும், பிராத்தனையும்
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்
தந்தன தந்தன தந்தன தந்தன, தந்தன தந்தனனா

நன்றென மைந்தனு வந்துப ரிந்தர
நந்தன கந்தகுகா
மன்றமி குங்குழ லஞ்சுர குஞ்சர
மங்கைம ணந்தமனா
என்றன ரும்பர சங்கர புங்கவ
வெங்குநி றைந்தவணா
இன்றென ரந்தையொ டுங்குவ ணம்புரி
யென்றுப ணிந்தனனே. 106

தானன தானன தானன தானன, தானன தானதனா

மாபல தேவர்க டேவம னோலய
வாழ்வுடை யார்முதல்வா
நீபந றாவணி மார்பவ னாரத
நீதிப ராகுமரா
பாபவி நாசந டேசகு கேசுர
பாலவி லோசனமா
தாபமு ளேனுனை யேகதி யாயடை
சார்புள னாளுதியால். 107

கலிநிலைத்துறை.
தானன தானா தானன தானா தனதானா

சேலன கோவார் வேலன தோளார் சிவைசேயா
மாலன மாலா ரோதிமொய் கானார் மகனேயா
மூலப ரேசா சீலந டேசா முருகாமா
சாலவி னோதா வாளுடை யாய்தா டரவாவா. 108

சூரச மாரா வாரக ராவார் சுகராயா
நாரசு ரேசா வீரகு மாரா நடராயா
ஈரவி ராமா மாமயி லாவே சிடரேறாத்
தாரவி சாகா காநனி காவா சகமீதே. 109

தானா தானா தானா தானா தனதானா

பீடார் நால்வே தாதீ தாசோ பிதசோதீ
தாடா தாடா தாதா வேயா ளெனவாடார்
கூடா வாழ்வா வாடா நாடா குகதேவா
ஏடா வாடா வீடீ வோநா மெனவாடே. 110

கலிவிருத்தம்

நாதநி லைக்குயர் வுளக ணலங்கிளர்மெய்ப்
போதவெ ளிக்குண லசைவு பொருந்தவிடு
பாதமெ னக்கருண் முனிவர் பணிந்தறியென்
பேதம றுத்திட வுரிய பெருங்குகனே. 111

உயிரோடு சித்துந லுடலு மொருங்குறநின்
றயர்பர நிட்டையி லொளிரு மரும்பொருளே
செயிரறு சிற்கக னமது திருந்துநடங்
கயமுற நித்தலு மிடுகு கவந்தருளே. 112

தேனினு மின்புறு மினிமை சிறந்திடவென்
பானிகழ் கின்றபல் பனிகள் பறந்தறநின்
கோனுனுள் வந்தன னெனுரை குயின்றருள்செய்
ஞானந டம்புரி குகவெ னலம்பரமே. 113

மூடம லங்கெட வறிவு முதிர்ந்திடவென்
னோடணை யன்பர்க ணெறியை யுவந்தருளுஞ்
சேடுய ரென்குக தகர சிதம்பரமாம்
வீடெனு மம்பெரு வெளியில் விளங்கொளியே. 114

வாழ்த்து

தையலர் சதுர்த்தர் நீசர் தாபதர் சுரரே னோருள்
வைதிக சைவ ஞான மார்க்கநன் னிலைவ ழாது
கைதவங் கடந்து நிற்குங் கனகமன் றடியர் வாழ்க
மெய்புக லிந்த நூலை விரித்தவர் கேட்டோர் வாழ்க. 117

உ
சிவமயம்
குஹப்ப்ரஹ்மணேநம:
திருச்சிற்றம்பலம்

# பரிபூரணானந்த போதம்

## ஆனந்தவத்து வணக்கம்

சத்தெ னச்சொலுந் தாவில் சிவத்திலுஞ்
சித்தெ னச்சொலுந் தேவி யிடத்திலும்
புத்தி ரப்பெயர் பூண்டில கானந்த
வத்து வின்கழல் வாழ்த்தி வணங்குவாம்.

உ
குஹப்ப்ரஹ்மனே நம:
திருச்சிற்றம்பலம்

# காசியாத்திரை

காசிக் குமர குருபரன் செய்த கனமடத்திற்
பாசிப் பயறு கலந்தநல் லன்னமும் பாலு முண்டங்
கேசற்று நின்ற வெனதரை யிற்கும ரேசனன்பர்
தூசிற் சிறந்தபொற்ற காடாய வத்திரஞ் சுற்றினரே

(இக்காடாயங் கட்டிய காலம் கலியுகம் ரூ00ச-இல் நிகழ் சுபகிருது வருடம் ஆடிமாதம் 22ஆம் நாள் புதவாரம் பூரநட்சத்திரம் என்க. என்பது ஈண்டு ஸ்ரீமத் சுவாமிகள் அருளிய குறிப்பு. ஆங்கிலம் 1902 ஆம் ஆண்டு)

தாமரைக்கு நீரன்றிச் சார்பிலையவ் வாறெனக்கும்
போம்வரைக்கு நின்னையலாற் போக்கில்லை-யோமுரைக்கு
மாண்டகையே செவ்வேளே யானந்த தாண்டவனே
யாண்டுமிது சத்தியமே யாம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## செக்கர்வேல் செம்மாப்பு

ஐம்முகச் சிவன்மா சால்பு மறுமுகச் சிவன்மா சால்பும்
மெய்ம்மைநின் றுணரு நீரார் மேன்றொழி லைந்து ணாசம்
மைம்மனக் கரும பாவ மடித்தலே யாங்கோ ரத்தால்
ஐம்மிகுத் துளவம் மூர்த்தி யருண்மறத் தொழிலஃ தென்பார். 114

இப்பெருந்த தேவை யெய்யத வெண்ணியா னிசைத்த வெல்லாஞ்
செப்பிடும் போதத் தேவன் றெரிந்துவந் தேகே னிற்குத்
துப்புய ரின்ப மீவே னெனச்சொல் லளித்த வாற்றால்
அப்பர னறிவின் மாண்பு மாற்றலு மருளு மோர்ந்தேன். 126

## செக்கர்வேளிறுமாப்பு

### கடவுள் வணக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கங்கையென் சுதனே யென்னக் கார்த்திகை மதலா யென்னச்
சங்கரி மகனே யென்னச் சங்கரன் குருவே யென்ன
மங்கைய ரிருவோ ருந்தூ மணத்திருத் தலைவா வென்னப்
புங்கவர் பரமா வென்னப் பொலிசிவ னடிபோற் றுவலே. 1

# குகப்பிரமவருட்பத்து

தனாதன தனாதன தனாதன தனாதன
தனாதன தனாதனதனா.

சொலாலுயர் மகாமறை சொலாமய மிலாவொரு
சுபாலய விபூதிவிமலா
தொலாதிப கவானரு ளுதாரகு மராவதி
சுகேசுரி கணான முருகா
வலாரிம களார்வல குலாம்விபி னர்காதலி
ஆ மனோரத மணாள குழகா
வசீகர துவாதச விலோசன குகாவரி
*மதூகமொய் +கரோடி முடியா
கலாபிமி சையேறிவி ளையாடெழி லுலாசஜ
கநாதக ருணாலயமனா
கஜாநந சகோதர வபேதசு குணாகர
கணாளனை கமோடுயர்விணோர்
எலாருழ ருளாளவ யிலாளவ ழியாதக
யிலாயகு கனேயருளெனா
எநாளும டிமீதுமு டிதாழ்கதழ் வுளாயிடை
யிலாதெனை யளாவியருளே. (1)

தனதன தனாதன தனதன தனாதன
தனதன தனானதனனா

திருமுறை சொலாதவன் மறைமொழி கலாதவன்
சிவனெறி நிலாதசிதடன்
செலல்வர வெணாதவன் கொலைவினை விடாதவன்
றினுமுடை மறாதபுலைஞன்
குருவடி தொழாதவன் பெறுமொழி பெறாதவன்
குணநல னிலாதவறிஞன்
குகநம வெனாதவன் றுறவற முறாதவன்
குடிவெறி யறாதமுருடன்
முருகனு மயேசனு மொருபொரு ளெனாதவன்
முசுமன நையாதவிரதன்
முடிவுடை மகாபதம் பெறுவதி லையாகலின்

மொழிகறை நணாமலருடந்
தருளுமரு ணாசலந் தனிலத னைநாமமொன்
றழகொடு நிலாவநினதன்
படிமல ரையேயுளம் பணினவ னையா* வணங்
கரையவெ னுளாடியருளே. (10)

# ஞானவாக்கியம்

## காப்பு

### குறள்வெண்செந்துறை

ஞான வாக்கிய நாதன் குமாரன்
கானளி னங்கள் கருதித் தொழுவாம்.

### நூல்

அறிவுக் கறிவே யிறைசற் சொரூபம். 1
இறப்பொடு பிறப்பறு சிறப்புள னவனே. 3
ஈன்றோ ரெவரையு மீன்றோ னிறையே. 4
எழுவகைத் தோற்றமு மழிதனிச் சயமே. 7
ஓதலு முணர்தலும் வேதாக மாந்தம். 11
இடம்பொரு ளேவற் றிடம்பர நிலையில். 18
இணக்கிக் கொண்டாற் பிணக்கொன் றுமிலை. 19
தலமுந் தீர்த்தமு மலமடு நிலையே. 20
இலம்பா டுறினுங் கலங்கார் விவேகர். 26
குருவரு ளின்றி யருள்வர லின்றே. 36
சூக்கத் தினுமதி சூக்க மறிவு. 48
செயற்கை தணந்தோ ரியற்கை யறிவார். 49
சேய்பெண்டு சுற்ற மாய்கின்ற மட்டும். 50
சொப்பனம் போலா மிப்புவி யாக்கம். 52
சோர்வு படாதரு ளார்சிவ வாக்கம். 53

*அணங்கரைய = தெய்வங்களுக்கரசனே !

# நவவீரர் நவரத்தினக்கலிவிருத்தம்

## வீரவாகுதேவர் - மாணிக்கம்

சீர றாமுருக வேளுரை செழுமை
ஆர றாநிலய வாரியி லமரேண்
நார றாவுழுவ லேறிடு நலிவில்
வீர வாகுவெனும் வீரனை விழைவாம். (1)

### வீரகேசரிதேவர் - தரளம்

என்னை யாளிறை யாயுல கெங்கணும்
மன்னு கந்தபி ரான்மந்தி ரத்திடை
மின்னு வாழ்க்கைய றாவீர கேசரி
தன்னை யுள்ளன்பிற் றாழ்வர்க்கின் றூழலே. (2)

### வீரமகேந்திரதேவர் - புட்பராகம்

ஓதரும் வீரம கேந்திர னொருவன்
பாதமு ளேபடர் மாந்தர பரமீ
ஆதரம் வியம தாந்தரங் கருதுஞ்
சூதம காமர மீர்ந்ததோ மரவேள். (3)

### வீரமகேசதேவர் - கோமேதகம்

அரணத் திறையோ னையனா ரதமேன்
கரணத் தெணுவார் கவனூ றிடுவான்
முரணிற் பொருசூ ரனொடே முனைவோன்
சரணச் சுகவீ ரமகே சனரோ. (4)

### வீரபுரந்தரதேவர் - வைடூரியம்

திகையெலா நீக்கமி லாது செறிந்தபெருந்
தகையெலா மேற்றவிர் சாமி பதம்பரவாப்
பகையெலா நீக்கொரு பாடு பிறந்துளுவார்
மிகையெலாம் விட்டிடும் வீர புரந்தரனே. (5)

### வீரராக்கததேவர் - வயிரம்

வீவயன மிலாமேல் வீட்டுநெறியை நேடும்
ஆவலறவர் வாழ்வா னாட்டுமுருக வேளின்
தாவிலருள்கொள் வீர ராக்கதனடி தாழ்வார்
தேவருமறி யாவோர் சீர்த்தியிலுயர் வாரால். (6)

வீரமார்த்தாண்டதேவர் - மரகதம்

தாமத மெற்றிடு மாசில் சார்ச்சேந்தன்
சேமவ டிக்களி யாமொர் சீர்ச்சார்ந்தோர்
மாமிடன் மிக்குடை வீர மார்த்தாண்டன்
பூமன நச்சுநர் போதம் போய்க்காண்பார். (7)

வீராந்தகதேவர் - பவளம்

மள்ளலே றேண்சிகி யிவரு மஞ்சனை
உள்ளுவோ ரோங்கவ னுணர்வு சந்ததங்
கொள்ளுவீ ராந்தக னினைவு கொண்டிடின்
தள்ளுவார் காண்கணத் *தறுகண் யாவையும். (8)

வீரதீரதேவர் - நீலம்

ஆரெப்படி முனினும்மது போலத்திரு வருள்கூர்
நாரப்பெரு மானாயழ னாகப்பெய ரானாள்
தாரப்பொருள் வேலற்பணி தகைமைக்குண வீர
தீரப்பெய ரோனைப்புகழ் தெருளர்க்கிலை சிறுகே. (9)

# அட்டாட்டவிக்கிரகலீலை

நாற்பத்தெண்சீர்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

சந்திரசேகரமர்த்தநாரீ சுரஞ்
சக்கரப் பிரதானம்
தக்ஷிணமூர்த்தமிலிங்கம் லிங்கோற்பவந்
தக்ஷயக்கியபங்கம்
சந்தியினிர்த்தனஞ்சந்ததநிர்த்தனஞ்
சண்டே சாநுக்ரகம்
சலந்தரவதமகொராஸ்திரமேகப
தம்மசுவாரூடம்

*தறுகண் - கடுகக்கொல்லுதல், சிறுபாணாற்றுப்படை காண்க.

சத்யசதாசிவம்மிக்கச தாசிவந்
தருலகுளேசுவரம்
சகஜசுகாசனங்கூர்மசங்காரமச்
சாரிவராஹாரி
சற்குருமூர்த்தமுமேசமுமாபதி
ஜயபுஜங்கத்ராசம்
சார்த்தூலஹரிபைரவங்கலியாணசுந்
தரம்வடுகங்கிராதம்

கந்தரவிருஷபவூர்திவிஷாபஹ
ரணஞ்சுவராபக்நம்
துகளறுக்ஷேத்திரபாலகந்தொல்கரு
டாந்திகம்முகலிங்கம்
துங்ககங்காதரங்கங்காவிஸர்ஜநஞ்
சுபசோமாஸ்கந்தம்
சூரஸிம்ஹாரி* கமாரியமாந்தகஞ்
சுசி மாணவபாவம்
சுபகரபிரார்த்தனை மூர்த்தநறுந்திரி
புராந்தகஞ்சுரர்பரசும்
சுமுககங்காளமிரக்தபிஷைப்பிர
தானமிருஞ்சுடரே
சுடர்கவுரீவரப்பிரதம்மஹாபா
சுபதசொரூபமணி
தோன்றுபுஜங்கலளிதம்ரிஷபாந்திகந்
தோமறுகஜயுத்தம்

விந்தைவிளம்புகஜாந்திகம்வீணை
தயங்குதக்ஷிணமூர்த்தம்
மேதகயோகவினோ தமதாக
விளங்குதக்ஷிணமூர்த்தம்
விமலபிக்ஷாடனங்கவலையுத்தாரணம்
வேதகணம் புகழும்
விதிசிரகண்டனங் கவுரிலிலாசமந்
விதமெழிலரியர்த்தம்

*காமாரி=கமாரி எனக்குறுகிற்று. மாணவபாவம்=சிஷ்யபாவம்.

வீரபத்திரந்திரிமூர்த்திமுப்பாதம
ஹாவேதாளிநடம்
வெறுவறுமேகபதத்திரியுருவாய்
விளம்பறுபதுநான்கும்
விலாசவளிப்புநிமித்தமெடுத்தவொர்
மெய்ப்பொருளெதுவதுவே
விண்ணவர்மண்ணவர் கண்ணவர்யாவரும்
வீடருளாயெனவே

வந்தனைபுரியவிருந்துளனீயென
வண்டமிழான்மனசான்
வாழ்த்திவணங்கெனையாளவெனிருதய
மலரிலெழுந்தருளாய்
மந்திரநாயக தந்திரநாயக
மங்களநாயகவோம்
மயதவரீசுரபரமகுஹேசுர
வசனமனாதீத
வரதக்ருபாகரகுமரபராபர
வரைவறுஷாட்குண்ய
வஸ்துவெனற்புத சத்தியவித்தக
மரணமொடயனமிலா
வானவஞானநபோமணியேதிரு
மாலயனறியாவோர்
மாமலையின் பெயரான்குருநாதவென்
மருடெறுமாமுனியே.

கலியுக ஆண்டு 5000-ல் நிகழ் விளம்பி வருடத்தில், பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளால் இஃதருளிச் செய்யப்பட்டது. இவ்விருத்தத்தினை யுள்ளுருக்கத்தோடு முப்போதும் பாடியாடுக. ஆடாவிடினும் பாடுக. அங்ஙனஞ் செய்வார்க்கு உரோகநாசம், பாபநாசம், சத்துருநாசம், ஆயுள் விருத்தி, தைரியவிருத்தி, வீரியவிருத்தி, புத்திரவிருத்தி, புண்ணியவிருத்தி யுண்டாதலோடு சர்வார்த்த சித்தியும், முத்தியும் வாய்க்குமென்பது வாய்மை.

# குமரவேள்பதிற்றுப்பத்தந்தாதி

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஆளு நின்னடி சூழு நர்க்கரு
ளயில மற்றுமெ னக்கிடு
கேளு யர்ந்தெனை நம்பு மன்பு
கிளர்ந்த வர்க்குமி யைந்தசீர்
நாளு நல்குதி நாயெ னைத்தளி
னாலு மென்றனை நம்பியுன்
தாளு கந்தவ ரைப்ப ராபர
தள்ளி டாதடி நல்கியாள். (62)

அத்த னேயரு ளப்ப னேயென
தாதி யேபெரு நீதியே
நித்த னேநிரு வாண னேநினை
நேய னேமறை வாயனே
பித்த னேனறி யாது செய்த
பெரும்பி ழைத்தொகை மன்னியென்
சித்த மானது தண்ணெ னப்புரி
தேற லுங்கொடு சேயனே. (70)

வேல்பி டித்த கைம்மு தால்வி வேக நிட்டை யெம்பிரான்
மால்பி டித்த வென் மனத்தின் மன்னு மோவிண் மின்னுமோ
கால்பி டித்த வர்க்க தோர்க ணத்தி னெய்து மெண்ணிலா
நூல்பி டித்து ளாரு மேநு ழைந்து காண வல்லரோ. (75)

## திருத்தொடையல்

அண்டருக்கு முனிவருக்கு மகிலநிரை படைப்பவற்கு
மையார் சிவை
குண்டனுக்கும் வாழ்வேதவ் வசுரருயிர் நீவந்து
குடியா விட்டாற்
பண்டுமறை நனிநுவன்ற படிதரையி லுன்னருளைப்
படையார் தாவே
கொண்டுழல்வார் கதிபுகுதா ரெற்கருள்செய் யருளுருவக்
குகனே யன்றே. (10)

உ

சிவமயம்

குஹப்ரஹ்மணே நம:

திருச்சிற்றம்பலம்

# திருப்பாவும் திட்பமென்னு முறையும்

## கடவுள் வணக்கம்

பாராதி யைம்பூத மல்லாத தாயண்ட
        பகிரண்ட மூலமான
பரவிந்து பரநாத நிலையைக் கடந்தரும்
        பாவன வரூபவிரிவே
நாராக நிற்குமா மாயையை யகன்றதாய்
        நாப்பணடி யீறற்றதாய்
நானென தெனாநெறிச் செல்வர்கம் பீரமாய்
        நந்தறிரி பில்லாததாய்
நேராய வுவமான வுவமேய நீத்ததாய்
        நின்மல வசங்கநபமாய்
நித்தபரி பூரண வகண்டதத் துவஞான
        நிட்டையில் விளங்குநிலவாய்த்
தாரான மாய்முதிய முதனூ லிரண்டுமொரு
        சம்மதங் கொண்டுமுடிவிற்
சாற்றுநற் சச்சிதா னந்தமா யுள்ளசிவ
        சாமியைச் சிந்தைசெய்வாம்.

## பரமபதி

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருவாத வூரடிகள் சொற்றவா றடிசிரகு
        செப்பொணா ஞானவிண்ணாய்ச்
செறிநினக் கடிவினவி லேழ்பாத லங்களுஞ்
        செல்லான நிலையிலெனவாம்

பொருளாரு முடிவினவி லுரையிறந் திடமேய
புலமாகு நிலையிலெனவாம்
பூதபௌ டியவர்த்த மானவுர னாலுநல
போதமறை மறைகளாலுந்
தெருளான வாகம புராணங்க ளாலுமணி
சேரேணை முறைகளாலுந்
திட்டப் படுத்தவொரு குணமுளனு மல்லையிச்
சிறியனேன் மனதுவாக்கால்
ஒருதாறு செய்தோத வமைவையோ வெனையாள
வுள்ளவா னந்தவிளைவே
உயிரினுக் குயிராகி யறிவினுக் கறிவாகி
யொளிர்கின்ற பரமபதியே. 1

## குகப்பரமம்

வார்சா லுகத்திலெனை மனுவாய் வகுத்தவருண் மதியா
யிருக்கு நலருள்
சீர்சால வுற்றகரு வியெலா மசைக்குமருள் சிவநாட வைத்த
மெயருள்
ஊர்பேர் குணத்திரய மணவாத சுத்தவரு ளொளியாக நிற்கு
மொரருள்
பார்மீ தெனக்கருளு மருளாகு மித்தகைய பதியே
குகப்ப ரமமே. (1)

அடியார் தமக்குறுக ணணுகா தளிக்குமிறை யடரூழ்
வினைத்தொ டர்பினால்
மடியார் வெறுப்புறினு மினிதா யருத்துமிறை மறலூ ரிருத்து
மறமே
குடியா யிழைத்திடினு நமனாணை பெற்றவர்கள் கொடுபோக
விட்ட மிலிறை
படிமீ தெவர்க்குமிறை யெனவே யிருக்குமொரு பதியே
குகப்ப ரமமே. (2)

அணிநாய கந்துரிய மணிநாய கங்குசல ரவைநாய கங்கு
றைவறு
திணிநாய கங்கவிஞர் புகழ்நாய கம்பெரிய திருநாய கங்க
ருடெறு
துணிநாய கம்பரம குருநாய கம்பிரம சுபநாய கந்த மியனேன்
பணிநாய கம்பிரம மெனவே விளங்குமொரு பதியே
குகப்ப ரமமே. (6)

நயமே கிளர்ந்துபர சடியாரை யெந்தநில நகமாதி கண்க
ளினுமல்
வெயிலே விரிந்தபக லினுநா கருங்குமரம் வினைசோ ரிருஞ்ச
ரையினுந்
தயவோ டகம்புறனு முறையே புரந்தருள்செய் தகையார்
பெருங்க ருணையின்
பயனே விரும்பருண கிரியார் புகழ்ந்தவொரு பதியே
குகப்ப ரமமே. (10)

உ
சிவமயம்
குஹப்ரஹ்மணேநம:
திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீமத்-குமாரசுவாமியம்

(ஸ்ரீமத்-குமாரசுவாமியத்தில், எப்பாகத்தையேனுந் தொடங்கு முன்னர் குமாரஸ்தவத்தைச் சொல்லிக் கொள்ளலாம்.)

முதலாவது
திருவிளையாடற் காண்டம்

## முதல்வன் புராண முடிப்பு

சந்திர சேகரன் றழற்கண் ணேபொறி
வந்தன வாறவை மாசில் கங்கைசார்ந்
தைந்துட னொன்றணை குழவி யாகியா
றந்தநன் மாதர்க ளமுத முண்டவே 1

உண்டவை பலபல வுருவங் காட்டுபு
பண்டுமை யாலொரு படிவ மாயவள்
கண்டென வருத்தமு துண்டு காமர்செய்
அண்டவொண் கயிலைசென் றாடல் செய்யுமால் 2

ஆடலில் வெஞ்சுட ரசுவ மேறிய
தீடணை யம்புலி யிரத மூர்ந்தது
மூடமி லிந்திரன் முதலி னோர்கரி
சேடண வூர்ந்தது செம்பொற் சேயரோ 3

செங்கரு டன்புலி சீய மோதிமஞ்
சங்குற மேறுழை சரபம் யாடிவர்ந்
தெங்கணு மேகிய தெழில்கொ ளெந்நில
மங்கைய ரும்விழை மகிமைப் பிள்ளையே 4

பிள்ளைமை நீத்தொரு பெருவ யோதிகம்
உள்ளவ னாய்ச்சுர ருலகை நன்குசெய்
உள்ளமொ டங்ஙன முலாவி னான்வன
நள்ளிட னடைந்துகின் னரஞ்செய் தானவன் 5

செய்யத னோசையிற் சேர்வி லங்குபுள்
மெய்யைம றந்தன வேய்ங்கு ழுற்றொனி
ஐயனெ ழுப்பின னகலுண் மாதர்கள்
மையல்செய் விரகமுள் வருந்த நாளுமே 6

மேலட ரண்டமு மேய சேயவன்
மாலுடல் வரையிடை வந்து வானவர்
பாலுறு வலிகளைப் பாறச் செய்துதன்
வாலிருந் தைவத வடிவு காட்டினான் 7

காட்டலுஞ் சதமகன் கடவு ளேயெமை
வாட்டொரு சூரனை மடித்துக் காவெனக்
கேட்டவ னஞ்சன்மின் கிருபை செய்துமென்
றாட்டரன் பாற்படை யரசை வாங்கினான். 8

வாங்கிமற் கணத்தொடு மகிவந் தோதியும்
வீங்குமெயக் கயமுகன் றனையும் வீட்டுபு
பாங்குடைச் சிங்கனும் பானு கோபனும்
நீங்கிடக் கண்டவர் நிருபற் கீண்டனன். 9

கீளவை பரிகொடி யாய்க்கி ளர்ந்தன
ஆளொரு வரையடைந் தருணை யான்புகழ்
வாளன கண்ணியை மணந்து விண்புரந்
தாளெயின் மான்மணந் தான்ச யம்புவே. 10

கந்தசட்டி மாவிரத பூசையிற் கந்தபுராண படனஞ் செய்ய வேண்டுமென்னு நியதியுண்டு. அஞ்ஞான்று அதுசெய்தற் கியலாதார், இத்திருப்பத்தையே ஒரு முறை பத்தியோடும் பாடி அப்படன புண்ணியத்தைப் பெறலாம்; ஐயமின்று.

--ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்

## இரண்டாவது
## திருக்கைலாயத் திருவிளையாடல்
### (முதற்பத்து)

அளவி லாவறி வன்சர வணத்தட மமல
நளின மீதறு குழவிக ளாய்மிளிர் ஞான்று
அளக நீள்சிவை யறுமுக னாயவிர் கென்றே
வளர்க ரங்களி னணைத்தது கண்டுள மகிழ்ந்தாள். 1

அருத்தி னாடிரு வமுதமு முண்டத ராப்பூண்
ஒருத்த னோடவ ளோடுமை டைந்ததொண் கயிலை
திருத்த மார்நவ வீரர்க ளிலக்கர்கள் சிதறா
அருத்தி யோடுற வாடலுங் கொண்டதம் மழவே. 2

காலி னேழ்கட லுடைத்தது விடுத்தது கடின
மாலி றாவெழு வான்வரை தகர்த்தது வைசால்
வேலி னாலிருந் திசைக்கரி யாவையும் வீரிட்
டோலி டுஞ்சிறு பந்தென வாடிய துவப்பால். 3

இன்ன வாறுபல் பெருந்திரு வாடல்க ளிழைத்த
இன்ன லேதுமில் பரம்பொரு ளென்விளை யாட்டாற்
பின்ன மாயவெல் லாமுனம் போற்பிறங் குகவென்
றுன்னி யன்னன மாக்கிய மாண்பெவ ருறுவார். 4

பின்றை மாகயி லாயம தடைந்தெழில் பிறங்கு
மன்றன் மெய்யிளம் பூரணன் வதிதரு காலை
கொன்றை சூடியை நினைந்தொரு நாரதன் குயிலு
கின்ற வேள்வியிற் றகர்பிறந் ததுமுறை கெடலால். 5

தண்டை நூபுரங் கால்களிற் றயங்குமத் தகர்தான்
கொண்ட சேவுடல் குலுக்கியெப் புவனமுங் குலுங்க
மண்டி யேவரு கிறததை யடக்கென மாண்பார்
அண்டர் மாதவர் தொழுதனர் சேயவ னடியை. 6

வீர பாகுதன் கைகளி னாலதன் மிடன்மெய்ச்
சீர றாவணம் பிடித்ததைக் கொணர்தலுஞ் சேய்மைத்
தார மேனிய னதன்மிசை யிவர்ந்துபஃ றலமும்
ஏர றாமலு லாவியென் னூர்தியிஃ தென்றான் 7

அக்க டாவுமவ் வாறமர் வடைந்தபின் னளியாற்
சொக்க றாவய னரனடி களின்மலர் தூவி
மிக்க வோகையொ டேவெளி வருகையின் மிடலார்
செக்கர் வேளடி போற்றலி லாதய றிரிந்தான். 8

அவ்வ யன்றனை யழைத்துமுற் குடிலையி னருத்தஞ்
செவ்வ னோதுதி யெனக்குகன் கூறலுஞ் சிருட்டி
எவ்வ மின்றுசெய் நானது வென்றய னியம்ப
உவ்வி புண்ணுறப் புடைத்தன னவனையவ் வொருவன். 9

குட்டி மேலுதைத் திருந்தளை யிட்டிவற் கொடுபோய்
விட்டி டாதுகந் தாசல மிருத்துமி னெனுஞ்சூள்
இட்ட வாறுசெய் தனர்கண ரீசனுக் கவ்வோம்
கட்ட தோதின னருணையன் புகழ்தனிக் கடவுள்

சிறுவர்களால் இத்திருப்பத்து, காலை மாலை பூசிக்கப்பட்டுப் பத்தி பிறங்கப்பாடப்படுமாயின் அவர்கட்கு உடல்வன்மையுங் கல்வியறிவு முண்டாம்; ஐயமின்று.

--ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்

## திருப்பழநிமலைத் திருவிளையாடல்
(நான்காம் பத்து)

அமரர்சிறை விடுதலைசெய் விமலா
வடியவர்க டுயரமுறி னதனையடு மமலா
சமநிலையர் நினைவிலுறு பொருளே
தகுதகையர் தொழுவிமல மலையமுனி யருளே
கமலவய னறிவரிய சிவனே
கரிமுகவ னிளவலென மிளர்பரமபவனே
குமரகுரு குமரகுரு வெனவே
குயில்பவர்க ளிதயமன வரதம்வளர் நினைவே.

நான்காவது
## வேட்கைக் காண்டம்
### வேற்குழவி வேட்கை

பதினே ழொன்றும்விழை செய்ய பாத மோலிடநன்
மதிபோன் மாமைமுக மண்ட லம்ப குக்கநகுங்
கதியே வேற்குழவீ நின்னைக் காத லாற்றழுவ
நிதியே வாராயோ கைக ணீளு கின்றனவே. 1

சீவி முடித்தசிகை செம்பொற் சுட்டி நன்குழைகள்
மேவு முறுப்புநிழல் செய்ய வாடும் வேற்குழவீ
ஏவல் கொடுத்தருள வெண்ணி யென்முன் வாராயோ
கூவை வெறுத்தகண்க ளிச்சை கொள்ளு கின்றனவே. 2

பதினேழொன்றும் = பதினெண்கணமும். மாமை = அழகு. பகுத்தல் = ஈதல். நகுதல் = ஒளிவிடுதல்.

பாவே றுஞ்சவையர் மெச்சிப் பாடும் வேற்குழவி
சேவே றுன்பவளத் தெய்வ வாயை யே திறந்து
தூவே றின்கரைக ளிங்குச் சொல்ல வாராயோ
கோவே யென்செவிக ளிச்சை கொள்ளு கின்றனவே. 3

பொன்னார் கண்டசர நன்கு பூண்ட தங்கவொளிக்
கொன்னார் வேற்குழவீ நல்ல கொவ்வை நின்னிதழை
என்னார் வந்தீர விங்கு நல்க வாராயோ
உன்னா ருண்ணிலையும் வாயு மூறு கின்றனவே. 4

எண்ணே றும்பலயி லென்ற வேல்பி டித்தசையுங்
கண்ணே செங்குழவீ யென்றன் கண்க ளாடழகே
தண்ணே றும்வதன முத்தந் தாரா யோபிறிது
நண்ணா வென்னுளந்தா னின்னை நாடு கின்றதரோ 5

முத்தே மாமணியே முல்லை வெட்சி நன்கடம்பு
வைத்தா ரம்புனைந்தென் முன்னர் வாரா யோவுழலுஞ்
சித்தார் வேற்குழவீ யுச்சி செவ்வன் மோந்துகொள்ள
வித்தே யென்மூக்கி னிச்சை மீறு கின்றதரோ 6

ஐயார் நல்லரையிற் பொன்வ டங்க ளாடவுழல்
வையார் வேற்குழவீ யிங்கு வாரா யோகால்கள்
மையார் கண்மலர்க ளின்பு மல்க மோந்துகொள்ள
மெய்யா யென்மூக்கி னிச்சை மீறு கின்றதரோ 7

பொன்போன் மேனியிலே நல்ல பூம ணங்கமழும்
இன்பே வேற்குழவீ யிங்கு வாரா யோவிரியா
அன்பார் புன்முறுவல் செய்யு மார்விற் பல்லழகென்
துன்பீ ரம்பெனவே னெஞ்சந் துள்ளு கின்றதரோ 8

கள்ளார் செங்கரும்பே கண்டு தேனே யின்னமுதுண்
கிள்ளாய் வேற்குழவீ யன்பர் கேளே மாதுமையாள்
பிள்ளாய் கண்ணியொன்று நல்ல பெட்பி னான்றருவேன்
தள்ளா தேகொளற்கென் முன்னர் வாரா யோதகையே 9

மாண்பார் சந்தமுனி யின்ப வாழ்வே நின்னெழிலைக்
காண்பார் வேறழகு மிங்குக் காண்பார் கொல்லோநான்
ஊண்பா டஞ்சியுனை நன்கு காண்பா னின்றுவந்தேன்
வீண்போ காதபடி யிங்ஙன் வாராய் வேற்குழவீ 10

இத்திருப்பத்து, காலை மாலை பூசிக்கப்பட்டுப் பத்திபிறங்கப் பாடப்படுமாயிற் புத்திரதோடம் நிவர்த்தியாம்; சந்ததி விருத்தியாம்.

--ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்

## கந்தவேள் வேட்கை

**தான தத்தனனா தனதான தத்தனனா**

தூவி நச்சிகிமேல் வருதூய செச்சையனே
ஓவி லற்புதனே யொழியாவி ழுப்பதனே
சாவி னித்தியர்சார் தலையாய சித்துனையே
ஆவி மட்கினுமே யெனதாசை விட்டிடுமோ. 1

ஞான வித்தரனார் தருஞான ரத்தினமே
தேன யப்பமுதே சுகதேவ புத்தமுதே
வேன லக்கரவேர் மிளர்மீளி முத்துனைநான்
ஆனல் பற்றினுமே யெனதாசை விட்டிடுமோ. 2

தார கச்சுரையே தணவாத சர்க்கரையே
ஏர கத்தனியே சுவையேறு முக்கனியே
சூர கப்பகையே சுரசேனை நச்சுனையே
ஆரல் பற்றினுமே யெனதாசை விட்டிடுமோ. 3

மாசில் சித்திரமே மயிலூர்வி சித்திரமே
ஏசில் சித்துருவே யிகலோர்கள் சத்துருவே
காசில் பொற்றிருமான் மகள்காதன் முத்துனைநான்
ஆசி லெய்க்கினுமே யெனதாசை விட்டிடுமோ. 4

ஈச சித்தகமோ வெழுதாத புத்தகமோ
தேச ருட்குயினோ சுகசீவ ருட்பயனோ
தாச ரற்பெனவே தகவோர்நி னைக்கவுளோய்
ஆச முத்தினுமே யெனதாசை விட்டிடுமோ. 5

மட்கல் = ஒளிமழுங்கல். குயின் = மேகம்.

தான தந்தனனா தனதான தந்தனனா

ஏம மங்களனே மயிலேறு சங்கரனே
வீம மண்டிதனே வினை நூற கண்டிதனே
வாம னன்பரனே மதிநாத வுன்செயலால்
ஆம மண்டினுமே யெனதாசை பொன்றிடுமோ. 6

வேல னென்பரனே விதிவேத ரன்பரனே
வால வந்தணனே மலைமாது நந்தனனே
சீல புங்கவனே சிவபோத வுன்செயலால்
ஆல மண்டினுநா னெனதாசை பொன்றிடுமோ. 7

பூத வன்படையாய் புலராத வின்புடையாய்
நாத கந்ததொகா நவநாதர் நம்புகுகா
பீத கிம்புரிதா ரணிபீட வுன்றனைநா
டாத னந்தினுமே யெனதாசை நந்திடுமோ. 8

கீத சங்கமவாம் வெறிகேழ்கொ ளிந்துளமாம்
மோத மொய்ம்புடையாய் மொழிவேத கிஞ்சுகவாய்
நாத சுந்தரனே நதிபால வுன்றனைநா
டாத னந்தினுமே யெனதாசை நந்திடுமோ. 9

ஏக வம்பரனே தகரேறு செஞ்சுரனே
மோக ரிந்தனுபூ தியையோது மொய்ம்பனையாள்
நாக விந்திரனே குருஞான மந்திரனே
ஆக நந்தினுமே யெனதாசை நந்திடுமோ. 10

## பெருவேண்டுகோள்

கண்ணாயிர முடையான்முளை கனவிற்சர ணார்கண்
எண்ணாயிர முடையூர்தியி ருந்தேசிறை மீட்பேன்
உண்ணாய்துய ரென்றோதிய வுடையாயொளிர் பூவல்
வண்ணாவயின் மன்னாவெனை மறவேலெனை மறவேல். 1

அறிவேறுசை கீசவ்விய னார்சீடன டங்கா
நெறியாலணை யைம்பாதக நெடிலைக்களை யிறைவா
பொறியாயரு ணிலையாயதி புனிதாவயின் முதல்வா
வறிதேதுமில் குமராவெனை மறவேலெனை மறவேல். 2

முருகாவயின் முருகாவென மொழியும்மொரு மாதின்
ஒருகாதல னவள்கையினை யுதிரம்பெரு கரிகால்
அருளாலது வளரும்படி யயர் தண்ணளி யாளா
மருமாலைகொண் மார்பவெனை மறவேலெனை மறவேல். 3

வெறிவண்டிசை பாடும்பொழில் வேலூரினை யாளும்
பொறிதங்கிய புகழானலி யக்கோடனு றங்கும்
நெறிவந்தலர் வேலேவுதி நெரியும்பகை யென்ற
மறியின்சுதை தலைவாவெனை மறவேலெனை மறவேல். 4

திங்கட்சடை யவன்மங்களை திகழுஞ்சிவ கோச
மங்கைக்கும ரேசற்றொழு தான்வைகிட னெய்தி
அங்கைக்கிடு வால்வல்சிய யின்றோதிம றைந்த
மங்குற்பகை மணியேயெனை மறவேலெனை மறவேல். 5

எளியேனவி றமிழ்மாலையி யம்போர்பொழு தென்முன்
அளியாலது வென்னான்முடி யாதோவென வினவிக்
களியோடுக ரந்தாயிது காறுங்கொள லறியேன்
வளியூரொரு தேராவெனை மறவேலெனை மறவேல். 6

மாடாடுகள் பல்குந்திரு வளமேவுபி ரப்பைக்
காடாரிட மதினானடி கருதும்பொழு தெதுவும்
ஊடாடலி லாமேயொரு மொழியோதிம றைந்த
வாடாமுக முனியேயெனை மறவேலெனை மறவேல். 7

உரனந்திய பலவைணவ ருரனார்சிவ நெறியை
நிரல்விஞ்சிய பலநிந்தைசெய் தெற்குந்துயர் தரலைத்
திரன்விஞ்சிய வதிகாரிமு னொழியும்படி செய்தாய்
வரமஞ்சிகை முருகாவெனை மறவேலெனை மறவேல். 8

பரிவாளர்க ளங்கோதொரு பஞ்சாமிர்த வண்ணம்
இரியாவென துளநச்சினி தாமென்றொரு கிழமைப்
பெரியாண்முனம் வந்தோதிய செந்திற்பெரு மானே
வரிமாமறை யிறைவாவெனை மறவேலெனை மறவேல். 9

முழுநாரொடு புகழ்பாடிய முனிவற்கனு ரேசெய்
தொழுநோயற வேசெய்தொரு சுகநல்கிய துரையே
கழுகோதியி லமர்வேலவ கருணாகர முருகா
வழுவாவழி முதல்வாவெனை மறவேலெனை மறவேல். 10

## திருவருட்செயன்ஞாபகம்

பாடி யேயறி யாவெளி யேன்வாய்
பாட லுன்கிரு பையெனவு நினைந்தேன்
நேடி யேயறி யாதவென் னினைவு
நினைநி னைந்திடல் கருதியு மகிழ்ந்தேன்
பாட லோர்சத மாயபின் றேவைப்
பனவன் மாதவன் சயதச மியிலுன்
பீட றாமனு நல்கவென் னிதயம்
பிடித்த துங்குக நினதரு ளன்றோ.

## மணிமஞ்சரி

நீற்றிற்குங் கண்மணி மாலைக்கு நின்றிரு நாமசெப
ஆற்றிற்கு மாசைப் படுமெங்க ணெஞ்ச மறிந்தணைப்பார்
பேற்றிற் குரியபி ரானேயெந் தாய்வள்ளி பேணுமின்பே
சோற்றிற்கு நான்படும் பாடிங்குச் சொல்லி முடிவதன்றே. 3

## திருமாலைமாற்று*

வஞ்சிவிருத்தம் (இசை)
ஒற்றிலாச்செய்யுள்
இரண்டாமெழுத்தொன்றிய சிறப்புடை அடியெதுகை
அடியொன்றற்கொன்பதக்கரம்
தானன தானா தானதனா

சேரர சீமா சீரரசே
தாரம தாமா தாமரதா
நாரவ நானா நாவரநா
காரயி லாவே லாயிரகா. 1

### அடியொன்றற்குப்பத்தக்கரம்

தானன தானன தானதனா

வேலவ வேரர வேவலவே
மாலச மாசச மாசலமா
நீலக லாபிபி லாகலநீ
காலவ காமம காவலகா. 7

* மாலைமாற்றாவது - முதறொடுத்துங் கடைதொடுத்தும் வாசிக்க ஒரு படித்தாய் நிற்கும் பாட்டு. இத்திருப்பத்திலுள்ள விருத்தங்களின் ஒவ்வோரடியும் அவ்வாறு நிற்றல் காண்க.

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# நிவேத்தியம் செய்யும்போது ஓதும் தோத்திரங்கள்

## திருத்தொடையல்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அனந்தமறை யுன்னறிவாய் விளங்கவென வாறுமுக
வடிவே காட்டித்
தனந்தனியா வந்தசிவ சரவணனே பிரணவனே
சாமீ யுன்றன்
மனங்கனிய யானொழுகும் வகையையுணர்ந் தெனையறிய
வரமீந் தென்னைக்
க[illegible]ம்படவும் வைப்பதுநின் கடனேயென் றனுதினமுங்
கருதா நின்றேன். 1

அண்டமுத லணுக்கடையாய்க் கண்டசரா சரங்களெலா
மருளா முன்றன்
பண்டமெனத் தெரிதலினா லுனக்கிவணா னிசைக்கவொரு
பரிசுங் காணேன்
கொண்டதமி யேன்வணக்கந் தனைத்திருத்தி யாகவிங்கே
கொள்வா யென்னா
அண்டிநின்றே னின்னடிக்கே பொலம்பொலிந்த வயில்சிகண்டிக்
கரசே யன்றே. 8

உ
சிவமயம்
ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# தீபாராதனை செய்யும்போது துதிக்கும் துதிகள்

## விநாயகர் காயத்ரி

தத்புருஷாய வித்மஹே
வக்ரதுண்டாய தீமஹி
தந்நோ தந்தி: ப்ரஸோதயாத்!

## சிவஸ்துதி

ஓம் உமாபதயே பசுபதயே நமோ நம:
ருதம் சத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்கலம்
ஊர்த்தவ ரேதம் விருபாக்ஷகம் விஸ்வ ரூபா யவை நம:
ஸர்வோவை ருத்ரஸ் தஸ்மை ருத்ராய நமோ அஸ்து!

ஸ்ரீமத்-குமாரதந்த்ரம்
மந்திரோத்தார படலத்தில்
வருதியானம்

அஸுரகுலமர்த்தநாய யோகாய யோகாதிபதயே சாந்தாய சாந்தரூபிணே சிவாய சிவநந்தநாய ஷஷ்டீப்ரியாய ஸர்வஜ்ஞாநஹ்ருதயாய ஷண்முகாய ஸ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் க்ஷம் குஹரவி கங்காலாய காலரூபிணே ஸுரராஜாய ஸுப்ரஹ்மண்யாய நம :

-- திருப்பா

அஸதோமா சத்கமய !
தமஸோமா ஜ்யோதிர்க் கமய !!
மிர்த் யோர்மா அமிர்தங் கமய !!!

ஓம் சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# *மகேஸ்வர பூசை செய்யும்போது ஓதும் பதிகங்கள்*

## திருஞானசம்பந்தர் அருளிய
## திருவலஞ்சுழிப் பதிகம்

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ் திருவலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே

## திருஞானசம்பந்தர் அருளிய
## மயிலாப்பூர் பதிகம்

திருச்சிற்றம்பலம்

மட்டிட்ட புன்னையங்கானன் மட மயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

மைப்பூசு மொண்கண் மட நல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச்சரமமர்ந்தான்
நெய்ப்பூசு வெண் புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைபூசங் காணாதே போதியோ பூம்பாவாய்.

உ
சிவமயம்
ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

## *சேக்கிழார் அருளிய பெரியபுராணம்*
## *திருஞானசம்பந்தர் புராணம்*
திருச்சிற்றம்பலம்

மண்ணி னில்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணி னால்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்

## *அமர்நீதி நாயனார் புராணம்*

சிந்தை செய்வது சிவன்கழல் அல்லதொன் றில்லார்;
அந்தி வண்ணர்தம் அடியவர்க் கமுது செய்வித்துக்
கந்தை கீளுடை கோவணம் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன் கொள்வார்.

திருச்சிற்றம்பலம்

## *திருநாவுக்கரசு நாயனார் அருளிய தேவாரம்*
திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே.

## *மங்கள ஹாரத்தி*

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே.

உ
சிவமயம்
ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# மங்கள மொழி

ஹரகர நமப் பார்வதி பதயே !
ஹரஹர மகாதேவ!
நம வல்லீ தேவ சேனா பதயே!
ஹர ஹர குமார தேவ!
நம வல்லீ காந்த ஸ்மரணே!
ஹரஹர சுப்ரமண்யோம்!
சுப்ரமண்யோம்!! சுப்பரமண்யோம்!!

ஸ்ரீமத் அருணகிரிநாத முனிவரன் திருவடிவாழ்க!
வாழ்க வாழ்க நீடு வாழ்க!

ஸ்ரீமத் சிதம்பர முனிவரன் திருவடி வாழ்க!
வாழ்க வாழ்க நீடு வாழ்க!

ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச முனிவரன் திருவடி வாழ்க!
வாழ்க வாழ்க நீடு வாழ்க!

ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள் திருவடி வாழ்க!
வாழ்க வாழ்க நீடு வாழ்க!

வாழ்க நின் பேரருள்!
வெல்க நின் பேரருள்!!
போற்றி நின் பேரருள்!!!
வாழ்க பாம்பனார் குருவருள்
வெல்க பாம்பனார் குருவருள்
போற்றி பாம்பனார் குருவருள்
குருவருள் வாழ்க! திருவருள் வாழ்க!!

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# சண்முக நாமாவளி

| | | | |
|---|---|---|---|
| ஹர ஹர | சிவ சிவ | சண்முக | நாதா |
| ஹர ஹர | சிவ சிவ | வெண்முக | நாதா, |
| ஹர ஹர | சிவ சிவ | பரம | விலாசா |
| ஹர ஹர | சிவ சிவ | வபய | குகேசா, |
| அருண | கிரிபரவு | மருணெறி | நாதா |
| தரும | வுறுவர்புகழ் | சததள | பாதா, |
| அரிபிர | மாதிக | டொழுவடி | வேலா |
| திருவடி | நாரவ | ருளமுறை | சீலா, |
| எனினிய | குருநித | மெனுமதி | யீசா |
| சனனவெய் | தறவளி | தருபர | மேசா, |
| பாசா | பாச | பாப | விநாசா |
| மாசே | றாத | மான | நடேசா |
| போஜா | வாஜா | பூஜகர் | நேசா |
| தேஜா | ராஜா | தேவஸ | மாஜா, |
| தீஞ்சுவை | யருளொரு | திருவா | ரமுதே |
| ஓஞ்சர | வணபவ | வுருவே | யருவே. |

## வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க; ஆறுமுகம் வாழ்க; வெற்பைக் கூறுசெய் தனிவேல் வாழ்க; குக்குடம் வாழ்க; செவ்வேள் ஏறிய மஞ்ஞை வாழ்க; யானைதன் னணங்கு வாழ்க; மாறிலா வள்ளி வாழ்க; வாழ்கசீ ரடியா ரெல்லாம்.

உ

சிவமயம்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் அருளிய

# சதுரங்கபந்தம்

வாளா ரநாதி மயிலே றுஞ் சுந்தர மேயமகா
வேளா மயிலோய் விமலர்கண் வந்த சமாதியர்கோ
வாளா யெனுநாவுள் ளார்நா ரருந்தெங்க ளாரியற்கே
யாளாகி வாழ்வது மாணப் பெரிதெனு மாகமமே.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வா | ழ் | வ | து | மா | ண | ப் | பெ |
| கி | ளா | யா | கே | ற் | ய | ரி | ளா |
| ர் | நா | ர | ரு | ந் | தெ | ங் | க |
| ளா | ள் | வு | நா | னு | யெ | ளா | வா |
| ந் | த | ச | மா | தி | ய | ர் | கோ |
| வ | ண் | க | ர் | ல | ம | வி | ய் |
| ய | ம | கா | வே | ளா | ம | யி | லோ |
| மே | ர | த | ந் | சு | ஞ் | று | லே |




## இரதபந்தம்

இருள் பொருதா வம்பலச்சித் தென்னுமுரு காநீ
டிருவிண்ணோர் தேடுமருந் தேமாண்--பொருவாச்சீர்
தேசுதருஞ் செந்திநறுந் தீர்த்தவிற லோங்குசிதா
வாசிறந்த மாவின் பருள்.

உ
சிவமயம்
குமாரகுருப்யோ நம:
வேலுமயிலுந் துணை.

# மயூர பந்தம்

பாட்டு 100 எழுத்து. சித்திரம் 64 எழுத்து.
குற்றெழுத்துச் செய்யுள்.
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தனதன தனதன தனதன தனதன தனதன தனன தன.

**வரதந திபநக ரசுமுக வொருகுக வறிதுத புவிரிவிதி**
**மரகத வரிபர மதுகளி லசலவி மலமழ வெனலிரிய**
**மரபுறு குறுமுனி வருதிம யலசர மதிவிரி விபுதகுரு**
**சுரபதி நவரச பரததி நகரம துகமழ முனிவருதி.**

**(இதன் பொருள்.) வரதந = (விரும்புநர்க்கு இல்லையெனா தளிக்கும்) வரத்தையுந் தனத்தையுமுடைய, திப நகர = பிரகாச மயமான நகரத்தானே, சுமுக = நன்முகமுடையானே, ஒரு குக = (ஆன்மாக்களின் இருதய குகையின் கணிருத்தலின்) ஒப்பற்ற குக னெனும் காரணப்பெய ருடையானே, வறிது தபு = குறைவற்ற, விரி விதி = பெருந்தொழிலுள்ள, மரகத அரி = பச்சை நிறமுள்ள தேராகு மயில்வாகனத்தின், பரம = கடவுளே, துகள்இல் = குற்றமில்லாத, அசல விமல = (திருப்பரங்கிரி - திருச்செந்தில் - திருப்பழநி - திருவேரகம் - திருச்சோலைமலை - திருக்குன்றுதோறாடலெனப்படு) மலை யனைத்தையுந் தனக்குத் திருக்கோவிலாகக் கொண்ட அழுக்கில்லாத வனே, மழஎன் அல் = அறிவுமுதிர்ச்சி யில்லாதவெனது (ஆணவ) இருளானது, இரிய = கெடும்படி, மரபு உறு = பாரம்பரியமான பெரியார் தன்மையுற்ற, குறுமுனிவர் = அங்குஷ்ட அளவான அகஸ்தியமா முனிவர்க்கு, உதி மயல் = உதித்த மயக்கத்தையும், அசர மதி = சுவாசமில்லாத யோக அறிவையும், விரி = விளங்கச் சொல்லி யருளிய, விபுதகுரு = பேரறிவாளனான ஆசாரியனே. சுரபதி = தேவர்கள் தலைவனே, நவரச பரத = சிங்காரம் - வீரியம் - பெருநகை - கருணை - இரௌத்திரம் - குற்சை - சாந்தம் - அற்புதம் - பயமெனும் ஒன்பது இரசமுள்ள நாடக நாயகனே, திநகர = உலகை நோக்கு முயிர்க்கண்ணுக்கு ஒளியாக நிற்கும் வான சூரியனாகவும் அச்சூரியனை யுடம்பாக வுடையானாகவும் ஆன்ம வறிவாகிய கண்ணுக்கு ஒளியாகநிற்கு ஞானசூரியனாகவும் விளங்குவோனே.**

**பத்துப் பிரபந்தம்**

## மயூரபந்தம்

வரதந திபநக ரசுமுக வொருகுக வறிதுத புவிரிவிதி
மரகத வரிபர மதுகளி லசலவி மலமழ வெனலிரிய
மரபுறு குறுமுனி வருதிம யலசர மதிவிரி விபுதகுரு
சுரபதி நவரச பரததி நகரம துகமழ முனிவருதி.

உ

சிவமயம்

குமாரகுருப்யோ நம:

வேலுமயிலுந் துணை.

# சஸ்திர பந்தம்

பாட்டு 55 எழுத்து. சித்திரம் 30. எழுத்து.

**நேரிசை வெண்பா**

**வாலவே தாந்தபா வாசம்போ கத்தன்பா**
**மாலைபூ ணேமதிற மால்வலர்தே --சாலவ**
**மாபாசம் போக மதிதேசார் மாபூதம்**
**வாபாதந் தாவேல வா,**

**(இதன் பொருள்.) வால=தூயவனே, வேதாந்த பாவா=வேதாந்த விலாசக் கடவுளே, சம்போகத்து அன்பா=பேரின்ப மெனுஞ் சுவானுபவத்திற்கு நாயகனே, மாலை பூண்=மாலைகளை யணியும், ஏம=செம்பொன் னெனத் திகழ்வோனே, திற மால்=வன்மை சான்ற திருமாலுக்கும், வலர்=(மற்ற) வல்லவர்களுக்கும், தே=கடவுளே, சால் அவம்= (என்னகத்தே) மிகுந்துள்ள பயனின்மையும், மா பாசம்= பெரிய ஆணவாதி பந்தங்களும், போக=ஒழிய, மதி தேசு ஆர் =ஞானமும் புகழுமுள்ள, மா பூதம் = பரமான்மாவே, வா (நீ என்முன்) வந்தருளுக, பாதம் தா = திருவடிச் செல்வத்தைத் தந்தருளுக, வேல வா= வேலிறைவனே என்றவாறு.**

**குறிப்பு: (ஹாவ:) பாவமெனுஞ் சொல் பதார்த்தம், விலாஸம், சம்பத்தெனும் பொருளையும், (ஹூத:) பூதமெனுஞ் சொல் உண்மை, நியாயமெனும் பொருளையும் தரும்.**

**-பத்துப் பிரபந்தம்**




**சஸ்திரபந்தம்**

வாலவே தாந்தபா வாசம்போ கத்தன்பா
மாலைபூ ணேமதிற மால்வலர்தே -- சாலவ
மாபாசம் போக மதிதேசார் மாபூதம்
வாபாதந் தாவேல வா.

உ
சிவமயம்
குமாரகுருப்யோ நம:
வேலுமயிலுந் துணை.

# துவித நாகபந்தம்

(நெட்டெழுத்துச்செய்யுளும், மாலைமாற்றும், திரிபங்கியும், துவிதநாகபந்தமும்.)

1. சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயானே.

## வஞ்சித்துறை

2. சேயா சேயாதே
தேயா சேயாசே
மாயா மாயாவா
வாயா மாயாமா

3. வாயா மாவாயா
மாயா சேமாசே
யோயா நேயாவோ
யாயே தேயானே.

இதனில் 1,2ஆம் அடிகள் தம்மின் மாலைமாற்றாம் நான்கடிகளையும் முறையேயிரண்டிரண்டு சீராகப்பிரித்துப் படிக்கும்போது பாம்புக்கொரு பாட்டாகப் பொருளோடு முடிகின்ற மேற்காட்டிய மோனை பிழையா விரண்டு வஞ்சித் துறைகளாகும். ஆகவே யிவ்விருத்தம் குழிப்புடைய நெட்டெழுத்துச் செய்யுளும், மாலை மாற்றும், திரிபங்கியும், துவிதநாகபந்தமு மாயிற்றென்க.

இதன் பொருள். சேயாசேயா=சேயவனே சேயவனே, தே=கடவுளே, தேய்ஆக=(எனது) சிறுமையைக் கெடு, ஆசுஏமா=சிறுமைக்கு நமனாயுள்ளானே, யாமாயா=(சத்திருபமாய்ச் சுருங்கியிருந்து) வியக்தி=ருபாக விரியும் மாய மாயைக்க கதிபதியே, வா=(எண்முன்) வந்தருள்வாயாக, வாயாமாயாமா=(உயிர்களோ டத்துவிதமாயிருந்து மவைக்டகுக்) கிட்டாத மகாசிவராத்திரியந்தனே, வாயா=உண்மைப்பா டுடையானே, மாவாயா=சிறந்த

வாக்குடையானே. மாயா=மாயவித்தைகளுடையானே,சேமா= சேமமுடையானே, சேய்=இளநலமுடையானே, ஒயாநேயா=(அன்பர்மாட்டு) ஒழியா நேயமுடையானே, ஒயாய் ஏது = (என்கண்ணதாய) ஏதெனுங் குற்றத்தையொழித்தருள், ஆள் = ஆண்டருள் என்றபடி. ஏ யிரண்டும் அசை.

திருவலங்கற்றிரட்டு - இரண்டாம் கண்டம்



**துவிதநாகபந்தம்**

சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயாளே.




## கமலபந்தம்

வரவிதி திருவ வருதிபொ னரவ
வரனது கருவ வருகணை குரவ
வரகுக மருவ வருமறை பரவ
வரபத மருவ வருமதி விரவ.

உ

# பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் பாடல்கள்

# ஸ்ரீமத் அருணகிரிநாதசுவாமிகள் அருளிய
## பாடல் முதற்குறிப்பகராதி

